# ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

தொகுதி 62 | ஏப்ரல்—1982 | இதழ் 4


## பொருளடக்கம்



# ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004

## 1982 ஏப்ரல் மாத நிகழ்ச்சிகள்

| | | |
|---|---|---|
| ஸ்ரீராம நவமி : | | 2-4-82 வெள்ளிக்கிழமை (மாலை வழிபாட்டிற்குப் பிறகு ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம்) |
| 4-4-82 | | ஞாயிற்றுக்கிழமை மாலை 5 மணி முதல் 6 மணி வரை திரு கே. அருணுசலம் அவர்களால் 'ஸ்ரீராமபிரான்' என்ற தலைப்பில் ஹரிகதா காலேட்சேபம் நிகழ்த்தப்பெறும். |
| | | **ஸ்ரீராமநவமி பொதுக் கூட்டம்** (மாலை 6 மணி முதல் 7 மணி வரை) |
| | | தலைவர்: சுவாமி கபீரானந்தர் |
| | | பேசுபவர்: திரு வி. எஸ். வி. குருஸ்வாமி சாஸ்திரிகள் |
| சத் சங்கம் : | | ஞாயிறுதோறும் மாலை 4 மணி முதல் 5-30 மணி வரை |
| | | ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாம பாராயணம் (11-4-82 & 25-4-82) |
| | | ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் (18-4-82) |
| 11-4-82 | 1. | ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமம்—திரு வி. ஆர். கல்யாணசுந்தர சாஸ்திரிகள் |
| 18-4-82 | 2. | இராமாயணம்—திரு ஆர். கோதண்டராமன் |
| 25-4-82 | 3. | ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம்—திரு வி. எஸ். வி. குருஸ்வாமி சாஸ்திரிகள் |

மாலை 5-35 மணி முதல் 6-30 மணி வரை சுவாமி கபீரானந்தர் 'பக்தி ரத்தினுவளி' என்ற தலைப்பில் ஏப்ரல் 11, 18, 25 தேதிகளில் ஞாயிற்றுக்கிழமைகளில் ஆங்கிலத்தில் உரை நிகழ்த்துவார்.

**வார நாட்களில் நடைபெறும் சொற்பொழிவுகள் மாலை 5-30 மணிக்கு**

| | |
|---|---|
| திங்கள் | ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசங்கள் · சுவாமி அமிர்தானந்தர் |
| செவ்வாய் | தேவி மாகாத்மியம்—சுவாமி பிரசாந்தானந்தர் |
| புதன் | இராமாயணம்—சுவாமி கமலாத்மானந்தர் |
| வியாழன் | பகவத்கீதை – பிரம்மசாரி சின்மய சைதன்யா |
| வெள்ளி | துளசி இராமாயணம்—சுவாமி வீதபயானந்தர் |
| சனி | அத்யாத்ம இராமாயணம்—ஜஸ்டிஸ் டி. ராமகிருஷ்ணன் (3-4-82 மட்டும்) |

மாலை வழிபாட்டிற்குப் பிறகு இரவு 7 மணிக்கு 'ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசங்கள்' என்ற தலைப்பில் சனிக்கிழமைகளில் சுவாமி கபீரானந்தர் ஆங்கிலத்தில் உரை நிகழ்த்துவார்.

விசேஷ தினங்கள் :

| | |
|---|---|
| 28-4-82 புதன் | ஸ்ரீசங்கரர் & ஸ்ரீராமானுஜர் ஜயந்திகள் |
| 2-5-82 ஞாயிறு | ஸ்ரீசங்கரர் & ஸ்ரீராமானுஜர் ஜயந்தி விழாப் பொதுக் கூட்டம் |

4-4-82 & 19-4-82 ஆகிய ஏகாதசி தினங்களில் மாலை வழிபாட்டிற்குப் பிறகு ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம் நடைபெறும்.

குறிப்பு : கடந்த இதழில் 'வேறு சில நிகழ்ச்சிகள்' என்ற தலைப்பில் கொடுக்கப்பட்டிருந்த நிகழ்ச்சிகள் அனைத்தும் ஏப்ரல் மாதத்திலும் நடைபெறும்.

அனைவரையும் அனைத்து நிகழ்ச்சிகளிலும் கலந்துகொள்ளுமாறு அன்புடன் அழைக்கிறோம்.

தொலைபேசி
71281

தலைவர்
ஸ்ரீராமகிருஷ்ண மடம்
சென்னை-600 004




# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை.
—திருமூலர்

| தொகுதி 62 | துந்துபி ௵ சித்திரை ௴ | இதழ் 4 |
|---|---|---|




नमामि धर्मनिलयां करुणां लोकमातरम् ।
पद्मप्रियां पद्महस्तां पद्माक्षीं पद्मसुन्दरीम् ॥

நமாமி தர்மநிலயாம் கருணாம் லோகமாதரம் ।
பத்மப்ரியாம் பத்மஹஸ்தாம் பத்மாக்ஷீம் பத்மஸுந்தரீம் ॥

—லக்ஷ்மீ அஷ்டோத்தரசதநாம ஸ்தோத்திரம்

தாமரையிடம் பிரியமுள்ள, தாமரையைக் கையில் கொண்ட, தாமரைக் கண்களுடைய, பத்மசுந்தரியான, தருமத்திற்கு இருப்பிடமான, கருணையுள்ள, உலக மாதாவை வணங்குகிறேன்.

எவ்வுயிரும் என்னுயிர்போல் எண்ணி இரங்கவும் நின்
தெய்வ அருட் கருணை செய்யாய் பராபரமே.
அன்பர் பணிசெய்ய எனை ஆளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானே வந்தெய்தும் பராபரமே.
எல்லாரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே.
தம்முயிர் போல் எவ்வுயிரும் தானென்று தண்ணருள்கூர்
செம்மையருக்கு ஏவல் என்று செய்வேன் பராபரமே.

—தாயுமானவர்



# ஸ்ரீராமகிருஷ்ணரின் அருள்வாக்கு

**ஞாயிறு, டிசம்பர் 9, 1883**

சிறிது நேரத்திற்குப் பிறகு குருதேவர் ம-விடம் வைஷ்ணவ மகான்களைப் பற்றிய 'பக்தமாலா' என்ற புத்தகத்தைப் படித்துக் காட்டும்படி கூறினார். அதன்படி ம-வும் படிக்க ஆரம்பித்தார் :—

ஜயமல் என்று ஓர் அரசன் இருந்தான். பகவான் ஸ்ரீகிருஷ்ணரிடம் அவன் இதயபூர்வமான பக்தி பூண்டிருந்தான். அவன் கிருஷ்ணரை, சியாமசுந்தரர் என்ற பெயரில் வழிபட்டு வந்தான். கிருஷ்ணபூஜைக்கு உரிய எல்லா நியம அனுஷ்டானங்களையும் விதிமுறை தவருமல் அவன் மிகுந்த சிரத்தையோடு கடைப்பிடித்துக் கிருஷ்ணனை வழிபட்டு வந்தான். தனது இஷ்ட தெய்வத்திடம் ஆழ்ந்த பற்றுக் கொண்டு லயித்துத் திருப்தி அடைந்திருந்த அந்த அரசனின் உள்ளத்தில் மற்றத் தேவதேவியரைப் பற்றிய எண்ணம் எழுந்ததில்லை. அவன் பின்பற்றி வந்த பக்திசாதனைகளில் ஒன்று, தனது இஷ்ட தெய்வமான கிருஷ்ணரை நாள்தோறும் தவருமல் மத்தியான்ன காலம் வரை ஒரே மனதுடன் பூஜை செய்ததாகும். இந்த நல்ல பழக்கத்தை அவன் எந்தக் காரணத்தை முன்னிட்டும் கைவிடாமல் இருந்து வந்தான். தனது ராஜ்யமே அழிந்தாலும் சரி, அல்லது செல்வம் முழுவதுமே கரைந்து போனாலும் சரி, அவன் பூஜை நியமத்தை மட்டும் ஒருபோதும் மாற்றிக்கொள்ள மாட்டான். இவ்விதம் பூஜைக் கிரமத்திலிருந்து ஜயமல் வழுவாதவன் என்ற ரகசியத்தை அறிந்து கொண்ட பக்கத்து நாட்டு அரசன் காலைநேரத்தில் ஜயமல்லின் ராஜ்யத்தின்மீது படையெடுத்தான்.

ஜயமல்லின் கட்டளையின்மையால் அவனது போர்வீரர்களால் போரில் ஈடுபட முடியவில்லை. எனவே அவர்கள் பகைவனின் படையெடுப்பைப் பேசாமல் பார்த்துக்கொண்டிருந்தனர். மெல்ல மெல்ல, பகைவர் தலைநகரின் கோட்டையைச் சூழ்ந்து முற்றுகையிட்டனர். அந்த நிலையில்கூட ஜயமல் பூஜையறையை விட்டு வெளியே வரவில்லை. அவனது தாய் பூஜையறைக்குப் போய்ப் பரிதாபமாகத் தேம்பித் தேம்பி அழுதுகொண்டே ஜயமல்லை யுத்தம் செய்யப் போகும்படி வேண்டினாள். ஆனால் ஜயமல் மன்னனோ மிகவும் அமைதியாக அவளிடம், ''அம்மா, நீ ஏன் கவலைப்படுகிறாய்? சியாமசுந்தரர்தாம் எனக்கு இந்த ராஜ்யத்தைக் கொடுத்தார்; அவரே அதைத் திருப்பி எடுத்துக் கொண்டுவிட நிச்சயித்திருந்தால், நான் என்ன செய்ய முடியும்? அதற்கு மாறாக, அவரே என்னைக் காப்பாற்ற வேண்டும் என்று நினைத்தாரானால் எவராலும் எனக்கு எந்த விதத் தீங்கும் விளைவிக்க இயலாது. நமது சொந்த முயற்சிகளெல்லாம் பயனற்றவையேயாகும்'' என்று கூறிவிட்டான்.

இவ்விதம் ஜயமல் மன்னன் சொல்லிக்கொண்டிருந்ததற்கிடையில் இஷ்டதெய்வமான சியாமசுந்தரரே குதிரை லாயத்திலிருந்து ஜயமல்லின் குதிரையை அவிழ்த்து எடுத்துக் கொண்டு,

உண்மையாகவே போருடை தரித்துப் போர்க்களத்தை நோக்கிப் புறப்பட்டிருந்தார். தன்னந்தனியாகவே அவர் பகைவரை எதிர்த்து, எதிரியின் படையை அழித்துவிட்டார். படையெடுத்து வந்த எதிரியின் படையைச் சின்னபின்னப் படுத்தியபிறகு, கோவிலுக்குப் பக்கத்தில் குதிரையைக் கொண்டு வந்து நிறுத்திவிட்டு, சியாமசுந்தரர் கோவிலுக்குச் சென்றுவிட்டார்.

ஜயமல் பூஜை முடிந்து வெளியில் வந்தபோது, கோவிலுக்கு அருகில் தன் குதிரை கட்டப்பட்டிருந்ததையும், அது களைத்து வேர்வை சொட்டச் சொட்ட நிற்பதையும் கண்டான். ''என் குதிரை மீதேறிச் சவாரி செய்தது யார்? அதைக் கோவிலுக்கு அருகில் கொண்டு வந்து நிறுத்தியது யார்?'' என்று காவலாளிகளை அவன் அதட்டிக் கேட்டான். காவலாளிகளான வீரர்களோ தங்களுக்கு அதைப்பற்றி ஒன்றுமே தெரியாது என்று ஒரே குரலாகக் கூறினர்.

குழப்பத்துடன் மன்னன் தனது படையைத் திரட்டிக்கொண்டு போர்க்களம் நோக்கிச் சென்றான். அங்கே பகைவரின் படைவீரர் அனைவருமே அங்கும் இங்குமாக விழுந்து பிணமாகக் கிடந்ததை ஜயமல் கண்டான். பகைவனான அரசன் ஒரே ஒருவன் மட்டுமே அந்த யுத்தகளத்தில் உயிர்தப்பியிருந்தான். நடந்தது என்னவென்று ஒன்றும் புரியாமல் விழித்தபடியே ஜயமல் யுத்த களத்தைப் பார்த்துக்கொண்டு நின்றபோது, பகைவனான அரசன் ஜயமல்லின் அருகில் வந்து அவனை வணங்கி, ''தயவுசெய்து நான் சிலவற்றைத் தங்களுக்குத் தெரிவிக்க அனுமதியுங்கள். என்னால் யுத்தம் செய்யவே முடியவில்லை. உங்களுடைய அந்தப் போர்வீரர் இந்த உலகத்தையே வெற்றி கொள்ளக்கூடிய பராக்கிரம சாலியாக இருக்கிறார். இனி எனக்கு உங்கள் செல்வமோ ராஜ்யமோ வேண்டாம். வேண்டுமானால் தாங்கள் விரும்பினால் என்னுடைய ராஜ்யத்தையும் சந்தோஷமாகத் தங்களுக்குத் தந்துவிடுகிறேன். நீங்கள் மட்டும் உங்களுடைய நண்பனான அந்த நீலநிறப் படைவீரனைப் பற்றி எனக்குச் சொன்னால் போதும். என் கண்கள் அந்த வீரரின்மீது பட்டதுதான் தாமதம், அவர் என் உள்ளத்தையும் உயிரையும் ஒரேயடியாகக் கவர்ந்துகொண்டுவிட்டார்'' என்று கூறினான்.

அந்த மன்னன் அவ்விதம் தெரிவித்தபோது, சியாமசுந்தரர்தாம் போர்க்களம் சென்றவர் என்பதை ஜயமல் உடனே ஒரு நொடியில் புரிந்து கொண்டான். படையெடுத்து வந்த மன்னனுக்கும் அந்த உண்மை விளங்கிவிட்டது. அவன் ஜயமல் மன்னனை மரியாதையுடன் வணங்கி எழுந்தான். ஜயமல்லின் மூலமாகக் கிருஷ்ணரின் கிருபைக்கு அந்த மன்னன் பாத்திரமானான்.

ம- கதையைப் படித்து முடிந்ததும் குருதேவர் ம-வுடன் பேசத் துவங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: இதையெல்லாம் நீ நம்புகிறாயா? கிருஷ்ணரே குதிரைமீது சென்று ஜயமல்லின் பகைவர்களைக் கொன்றார் என்பதை நீ நம்புகிறாயா?

ம-: ஜயமல் சிறந்த கிருஷ்ண பக்தன். அவன் மனப்பூர்வமாகக் கிருஷ்ணரை வழிபட்டான் என்பதில் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. ஆனால் கிருஷ்ணர் குதிரைமீதேறிப் போர்க்களத்திற்கு வந்ததைப் பகைவர் அனைவரும் பிரத்தியட்சமாகப் பார்த்தார்கள் என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. கிருஷ்ணர் குதிரைமீதேறி அங்கு வந்திருக்கலாம்; ஆனால் அங்கிருந்தவர் யாவரும் உண்மையாகவே அவரைப் பார்த்தார்களா என்பது எனக்குத் தெரியாது.

ஸ்ரீராமகிருஷ்ணர் (புன்சிரிப்புடன்): இந்தப் புத்தகத்தில் பக்தர்களைப் பற்றிய பல அழகிய கதைகள் இருக்கின்றன. ஆனால் இவையெல்லாம் ஒருதலைப்பட்சமாகவே இருக்கின்றன. மேலும் இந்த நூல், தனது கருத்துக்களிலிருந்து வேறுபடுபவர்களையெல்லாம் தூற்றுகிறது.

மறுநாள் காலைநேரம். தோட்டத்தில் நின்றுகொண்டு குருதேவரும் ம-வும் பேசிக்கொண்டிருந்தனர்.

ம-: நான் இங்கே வந்து தங்கலாமா?

ஸ்ரீராமகிருஷ்ணர்: தங்கலாம். அது சரி, நீங்களெல்லோரும் இங்கு இப்படி அடிக்கடி வருகிறீர்களே, இது எதைக் குறிக்கிறது? பொதுவாக ஒரு சாதுவைப் பார்ப்பதற்கு மக்கள்

ஏதோ ஒரு தடவைதான் செல்வார்கள். ஆனால் நீங்களெல்லாரும் இப்படி அடிக்கடி வருகிறீர்களே, இதன் தாத்பர்யம் என்ன?

ம- பதில் எதுவும் சொல்லாமல் மௌனமாக இருந்தார். குருதேவரே தமது கேள்விக்குப் பதில் அளித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம - விடம்): எனக்கு மிகவும் அந்தரங்கமானவர்களில் ஒருவனாக நீ இல்லாமற் போனால் இங்கு இப்படி அடிக்கடி வருவாயா என்ன? அந்தரங்கமானவன் என்பதற்கு என்ன அர்த்தம் என்றால் என் சொந்த உறவினன், எனக்குச் சொந்தமானவன், எனக்கு உரியவன், தந்தையும் மகனும் போல, சகோதரனும் சகோதரியும் போல என்று அர்த்தம். நான் உங்களுக்கு எல்லா விஷயத்தையும் சொல்லிவிடுவதில்லை. அப்படி எல்லாவற்றையும் சொல்லிவிட்டேனானால் நீ மீண்டும் இங்கு வருவாயா என்ன?

ஒரு சமயம் சுகதேவர் பிரம்மஞானம் பெறும் பொருட்டு ஜனகரிடம் சென்றார். ஜனகர், ''முதலாவதாகத் தட்சிணையை எனக்குத் தந்துவிடு'' என்று சுகதேவரிடம் கூறினார். சுகதேவர் அதற்கு, ''உபதேசம் பெறுவதற்கு முன்னால் நான் ஏன் உங்களுக்குத் தட்சிணை தர வேண்டும்?'' என்று வினவினார். ஜனகர் சிரித்துக் கொண்டே, ''உனக்குப் பிரம்மஞானம் ஏற்பட்ட பிறகு குருசிஷ்ய உணர்வு உன்னிடம் நிலைத்திருக்குமா என்ன! ஆகவேதான் முதலில் தட்சிணையைத் தரவேண்டும் என்று கூறினேன்'' என்று விளக்கினார்.

அப்போது சுக்லபட்சத்தின் இரவுநேரம். சந்திரன் தனது குளிர்ந்த நிலவொளியை எங்கும் பாய்ச்சிக்கொண்டிருந்தான். ம- காளிகோவிலைச் சேர்ந்த தோட்டத்தில் தனிமையில் உலவிக் கொண்டிருந்தார். தோட்டத்தின் ஒரு பக்கத்தில் குருதேவரின் அறை, நஹபத், மகிழமரங்கள் அடர்ந்திருந்த இடம், பஞ்சவடி ஆகியவை இருந்தன. மறு பக்கத்தில் நிலவொளியினால் பிரகாசித்தபடி புனிதகங்கை பிரவாகமாகச் சென்றுகொண்டிருந்தது.

ம- தமக்குத் தாமே பின்வருமாறு சிந்தித்துக் கொண்டிருந்தார்: 'உண்மையாகவே ஒருவன் இறைவனைத் தரிசிக்க முடியுமா? ஸ்ரீராமகிருஷ்ணரோ நிச்சயம் அது முடியும் என்று சொல்கிறார். ''நீ சிறிதளவு முயற்சி செய்து ஆத்ம சாதனம் பழகினால் போதும்; உடனே யாரோ ஒருவர் முன்வந்து, 'இப்படி, இப்படிச் செய்' என்று உனது ஆன்மிக முன்னேற்றத்திற்கு வேண்டிய உதவிகளைச் செய்து தருவார்'' என்று அவர் கூறுகிறார். அது சரி. நானோ திருமணமானவன். குழந்தைகள் வேறு எனக்கு இருக்கின்றன. இப்படியெல்லாம் இருந்தும் என்னால் பகவானை அடைய முடியுமா? (ம- சிறிது யோசித்தார். மீண்டும் அவரது சிந்தனை தொடர்ந்தது.) நிச்சயம் என்னால் பகவானை அடைய முடியும். அப்படி இல்லாவிட்டால் குருதேவர் ஏன் அவ்விதம் உறுதியாகச் சொல்லப் போகிறார்? கடவுளின் கிருபை மட்டும் இருக்குமானால் ஏன் அவரைத் தரிசிக்க முடியாது?

'இதோ என்முன்னால் இந்த உலகம் காணப்படுகிறது. சூரியன், சந்திரன், நட்சத்திரம், ஜீவர்கள், இருபத்துநான்கு தத்துவங்கள்- இவையெல்லாம் எப்படி உண்டாயின? இவற்றைச் சிருஷ்டித்தது யார்? நான் யார்? எனக்கும் அந்தச் சிருஷ்டிகர்த்தாவுக்கும் உள்ள தொடர்பு என்ன? இதையெல்லாம் அனுபூதியில் அறிந்துகொள்ளாவிட்டால் மனிதப்பிறவி வீணேயாகும்.

'ஸ்ரீராமகிருஷ்ணர் மனிதருள் சிறந்தவர் என்பது நிச்சயம். இத்தகைய ஒரு மகாபுருஷரை என் வாழ்க்கையில் பார்த்ததில்லை. இவர் நிச்சயமாகப் பகவானைத் தரிசித்திருக்கிறார். அப்படி இல்லாவிட்டால் 'அம்மா! அம்மா!' என்று அந்த அளவுக்கு அன்யோன்யமாக ஆண்டவனை அழைத்து அவருடன் இரவும் பகலுமாக இவரால் எப்படிப் பேச முடியும்? மேலும், அப்படி இல்லாவிட்டால், ஆண்டவன் மீது இவருக்கு இந்த அளவிற்கு ஆழ்ந்த பக்தி எப்படி ஏற்பட்டிருக்க முடியும்? வெளியுலகத்தையே மறந்துவிடும் அளவிற்கு இவர் ஆண்டவன்மீது பிரேமைபக்தி கொண்டிருக்கிறார். சமாதியில் லயிக்கிறார். அசைவற்ற ஜடம் போல இருக்கிறார். சில சமயங்களில் பிரேமையால் விளைந்த பரவசம் காரணமாகச் சிரிக்கிறார், அழுகிறார், ஆனந்த நர்த்தனம் புரிகிறார், பாடுகிறார்.' □

# சிவ சின்னங்கள்

ஒரு நாயகனை உடைய நாயகிக்கு மஞ்சள் பூச்சும், கழுத்தில் தாலியும் இன்றியமையாதன ஆகும். அது போலவே, சிவபெருமானை வழி படும் சிவபக்தர்களுக்குத் திருநீறும் ருத்திராட் சமும் இன்றியமையாதவை என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன.

திருநீறும் ருத்திராட்சமும் சிவ சின்னங்கள் எனப்படும். அவற்றுள் முதலாவதாகிய திரு நீற்றைப்பற்றி முதலில் தெரிந்துகொள்வோம். பிறகு ருத்திராட்சத்தைப் பற்றித் தெரிந்து கொள்வோம்.

திருநீறு (உயிர்கள் செய்யும் பாவங்களை இல்லாமற் செய்ய வல்ல விபூதி, மேலான ஐசுவரியம் அல்லது செல்வம்), ரக்ஷை (அணிந்து கொள்பவரைக் காப்பாற்றுவது) என்று பல பெயர்களில் ஆன்றோர் இந்த முதற் சின்னத்தை அழைத்திருக்கிறார்கள.

பஸ்ம ஜாபால உபநிஷதம், காலாக்னி ருத்ர உபநிஷதம், ச்வேதாச்வதர உபநிஷதம் முதலிய சம்ஸ்கிருத நூல்கள் திருநீற்றின் பெருமையைக் கூறுகின்றன.

தமிழில் திருஞானசம்பந்தர் இயற்றிய திருநீற் றுப் பதிகம் திருநீற்றின் பெருமையை நன்கு விளக்குகிறது.

திருநீற்றைச் சைவர் மட்டும்தான் போற்றி அணிந்துகொள்கிறார்கள் என்பதில்லை. வைண வர்கள் வீட்டில் பேய் பிசாசு முதலியவற்றால் பீடிக்கப்பட்டவர்களுக்குச் சிகிச்சை செய்யத் திருநீற்றைப் பயன்படுத்துகிறார்கள்.

கிறிஸ்தவ மதத்தைச் சேர்ந்தவர்கள் Good Friday நாளுக்குப் பிறகு ஒரு நாளில் அனைவரும் சிலுவை போன்று செய்த ஓலையைச் சுட்டு அதன் சாம்பலை ஒரு புதன்கிழமையில் அணிந்துகொள் கிறார்கள். அந்த நாள் Ash Wednesday என்று வழங்கப்பெறுகிறது.

மக்கள் எல்லாக் காரியங்களையும் திருநீறு அணிந்து கொண்ட பிறகுதான் ஆரம்பிக்க வேண்டும் என்பது சைவ மரபாகும்.

கோவிலுக்குள் செல்ல வேண்டுமென்றால், அவ்விதம் செல்வதற்கு உரிய தகுதியை வழங்கு வது திருநீறு என்று சித்தாந்தம் கூறுகிறது. அதற்கு ஓர் உதாரணம் வருமாறு—

திருநாவுக்கரசர் சமண சமயத்திலிருந்து துன்பப்பட்டுத் திலகவதியாரைச் சரணடையத் திருவதிகைக்கு வந்தார். அவ்விதம் அவர் வந்த நேரம் விடியற்காலை என்பதைப் பெரிய புராணம் மூலம் அறிகிறோம்.



தம் திருவடியில் வீழ்ந்து வணங்கிய அப்பர் பெருமானைச் சகோதரியாகிய திலகவதியார் சிவாலயத்திற்குள் அழைத்துச் செல்ல நினைத் தார். ஆனால், சிவாலயத்திற்குள் செல்வதற்கு நம்மைத் தகுதியுடையவர்களாகச் செய்வது திருநீறு அணிதல்.

ஆதலால் திலகவதியார் திருநீற்றை ஐந் தெழுத்து ஓதித் தம் தம்பியிடம் கொடுத்து அணியச் செய்தார். அவரும் இருகை ஏற்று அதை வாங்கி உடம்பெல்லாம் பூசிக்கொண்டு தமக்கு முன்வந்தவருடன் ஆலயம் சென்று பெரு மானை வணங்கினார்; பதிகம் பாடினார்; சூலை நோயும் தீர்ந்தது என்பது வரலாறாகும்.

எனவே நம்மைப் பரிசுத்தப்படுத்துவது திருநீறே என்று உணரலாம்.

அதன் பின்னர் திருநாவுக்கரசர் பாடியுள்ள பல தேவாரத் திருப்பதிகங்களில் விபூதி, ருத்திராட்சம் ஆகியவற்றின் பெருமைகளைக் குறிப்பிட்டுள்ளார்.

உதாரணம் வருமாறு:—

''எவரேனும் தாமாக இலாடத்திட்ட திருநீறும் சாதனமும் கண்டால்'' (சாதனம் - அடையாளம், சின்னம்) என்றும், ''மெய்யெலாம் வெண்ணீறு சாண்ணித்த மேனியாள்'' என்றும் திருநாவுக்கரசர் அருளியுள்ளார்.

சிவ சின்னங்களின் வரலாறுகளையும் அவற்றின் பெருமைகளையும் நாம் நன்கு உணர்ந்து கொண்டு அவற்றை அணிந்துகொண்டால், அணிந்துகொள்வதனுல் வரும் முழுப் பயனையும் அடையலாம்.

சிவ சின்னங்களின் வரலாறுகள் குறித்து உபதேச காண்டம், பிரம்மோத்தர காண்டம் முதலிய நூல்கள் விரிவாகக் கூறுகின்றன. இவற்றின் சாரத்தைச் சேக்கிழார்பெருமான் பெரிய புராணத்தில் 'முழுநீறு பூசிய முனிவர்' புராணம் பகுதியில் குறிப்பிட்டுள்ளார்.

## விபூதி

விபூதி என்று பொதுவாகச் சொல்லப்படும் திருநீறு மூன்று வகைப்படும். அவை முறையே கற்பம், அனுகற்பம், உபகற்பம் எனப்படுகின்றன.

கற்பம் - கன்றுள்ள பசுக்கள் இடும் சாணத்தைத் தாமரையிலையில் இட்டுச் சிவாக்கினியில் இட்டுச் சுட்டு எடுத்துச் சிவசிந்தனையோடு சேர்த்து வைப்பது கற்பம் எனப்படும்.

காட்டில் உலர்ந்துள்ள பசுவின் சாணத்தைக் கொண்டு வந்து பொடியாக்கிக் கோஜலத்தால் நன்ருகப் பிசைந்து சத்திமந்திரத்தால் உருண்டையாகச் செய்து ஹோம நெருப்பிலிட்டுச் சுட்டு எடுத்து வைப்பது 'அனுகற்பம்' எனப்படும்.

காட்டில் நெருப்பினுல் எரிந்து வெந்த நீறும், காட்டிலே தீயினுல் வெந்த சாணத்தின் நீறும், செங்கல்லைச் சுடும்போது உண்டான நீறும், இவைகளைத் தனித்தனியாக உருண்டையாகச் செய்து மடத்திலுள்ள சிவாக்கினியால் சுட்டு எரித்து எடுத்து வைத்துக்கொள்வது 'உபகற்பம்' எனப்படும்.

இந்த வகையில் தயாரித்த திருநீற்றை அன்பர்கள் தங்கள் நெற்றியிலும், மார்பிலும், இரு கைகளிலும், நீரில் குழைத்தோ குழைக்காமலோ மூன்று பட்டைகளாகத் தரித்துக்கொள்ள வேண்டும்.

தீட்சை செய்து கொண்டவர்கள் தங்கள் ஆசாரியர்கள் தங்களுக்கு உபதேசித்த மந்திரங்களைச் சொல்லி விபூதியைத் தரித்துக்கொள்ள வேண்டும்.

திருநீறு வெண்ணிறமாகவே இருப்பது மிகவும் சுத்தமானது. அத்தகைய வெள்ளைத் திருநீற்றை அணிந்துகொள்பவர்களுக்கு எல்லாச் செல்வங்களும் வந்து சேரும்.

செந்நிறமுள்ள திருநீறும், கருநிறமுள்ள திருநீறும் உபயோகிப்பதற்கு ஏற்றவை அல்ல. இவற்றை அணிவதால் வறுமை, பிணி, கடன் முதலியவை வந்து சேரும்.

எனவே, பக்தர்கள் வெள்ளைத் திருநீற்றைப் பக்தி சிரத்தையோடும் முழு நம்பிக்கையோடும் அணிந்துகொள்ள வேண்டும். இதனுல் நாம் அடையும் பயன்களுள் சில வருமாறு:—

1. அகத்தூய்மையும் புறத்தூய்மையும் வந்து சேரும்.
2. பேய் பிசாசுகள் நம்மை வந்து அணுகா.
3. எல்லாச் செல்வங்களும் வந்து சேரும்.
4. வீடுபேருகிய முக்தியும் கிடைக்கும்.
5. பூசப் பூசப் பொன்னிறத்தைத் தரும்.

திருமூலரும் திருஞானசம்பந்தரும் திருநீற்றைக் குறித்துப் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளனர்:—

கங்காளன் பூசும் கவசத் திருநீற்றை
மங்காமல் பூசி மகிழ்வரே யாமாகில்
தங்கா வினைகளும் சாரும் சிவகதி
சிங்கார மான திருவடி சேர்வரே.

—திருமூலர்

மந்திரம் ஆவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தரம் ஆவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திரம் ஆவது நீறு சமயத்தில் உள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் திருஆலவாயான்
திருநீறே.

—திருஞானசம்பந்தர்

## ருத்திராட்சம்

ருத்திராட்சம் சைவர்களின் இரண்டாவது மங்களச் சின்னமாக விளங்குகிறது.

இது ருத்திரன் கண்ணிலிருந்து தோன்றிய காரணத்தால் உருத்திராக்கம் அல்லது ருத்திராட்சம் என்று ஆயிற்று. (அக்ஷம் என்பதற்குக் கண் என்று பொருளாகும்.)

பிறவிக்கடலில் வீழ்ந்து கரையேற முடியாமல் தவிக்கும் உயிர்களைக் கரை ஏற்றுபவன் ருத்திரன் என்று கந்தபுராணம் குறிப்பிடுகிறது.

இன்னலங் கடலுட்பட்டோர் யாவரையும்
எடுக்குமாற்றால்

உன்னரும் பரம மூர்த்தி உருத்திரன் எனும்
பெயர் பெற்றான்.

இந்த ருத்திராட்சமணியின் பெருமையை ருத்திராட்ச ஜாபால உபநிஷதம், அக்ஷமாலிகேச உபநிஷதம், திரிபுர உபநிஷதம் முதலிய உபநிஷதங்கள் விரிவாகக் கூறியுள்ளன.

இதன் வரலாற்றையும் நாம் சுருக்கமாகத் தெரிந்துகொண்டு, அதைப் பக்தியோடு அணிந்து கொண்டால் நல்ல பேறுகளையெல்லாம் பெறலாம்.

முற்காலத்தில் தாருகாட்சன், கமலாட்சன், வித்தியுன்மாலி என்ற மூன்று அசுரர்கள் இருந்தார்கள். அவர்கள் முறையே பொன், வெள்ளி, இரும்பு ஆகியவற்றாலாகிய மூன்று கோட்டைகளில் இருந்துகொண்டு சிவபெருமானிடமிருந்து பெற்ற வரத்தால் தேவர்களைத் துன்புறுத்தி வந்தார்கள்.

துன்பம் பொறுக்காத தேவர்கள் சிவபெருமானைக் குறித்து ஆயிரம் வருடம் தவம் இயற்றினார்கள். அவர்களின் தவத்திற்கு இரங்கிய சிவபெருமான் தம் மூன்று கண்களிலிருந்து நீர்த் துளிகளைக் கீழே விழச் செய்தார். (நீர்த்துளிகள் விழுந்த இடம் இந்தியாவின் வடகோடியிலுள்ள இமயமலைச் சாரலிலுள்ள நேபாள தேசம் என்று கூறுகிறார்கள்.)

சிவபெருமானின் வலக் கண் சூரியன். இதிலிருந்து விழுந்த துளியிலிருந்து 12 மரங்கள் தோன்றின. இடக் கண் சந்திரன். இதிலிருந்து விழுந்த துளியிலிருந்து 16 மரங்கள் தோன்றின. நெற்றிக் கண் அக்கினி. இதிலிருந்து விழுந்த துளியிலிருந்து 10 மரங்கள் தோன்றின. (இந்த விவரம் விருத்தாசல புராணத்தில் காணப்படுகிறது.)



வலக் கண்ணிலிருந்து உண்டான துளிகளிலிருந்து தோன்றிய மரங்களில் கபிலநிறம், செந்நிறம், பொன்னிறமான மணிகள் தோன்றின. (மணி-அந்த மரத்தின் காய் என்பது.)

இடக் கண்ணிலிருந்து உண்டானவை வெண்ணிறமாக உள்ளன. நெற்றிக் கண்ணாகிய நெருப்புக் கண்ணிலிருந்து உண்டான மணிகள் கருநிறமானவை.

இறைவனது ஆணையால் இந்த மணிகளைத் தேவர்களும் முனிவர்களும் அணிந்துகொண்டு துன்பம் நீங்கி இன்பம் பெற்றார்கள்.

இந்த ருத்திராட்ச மணியைப் பல புராண ஆசிரியர்கள் பல விதங்களில் அழைத்துள்ளனர். தெய்வமாமணி, புனிதமாமணி, நாயகன் விழி மணி, கண்மணி, அக்கமாமணி, கடவுள் நன் மணி என்பன அவற்றுள் சிலவாகும்.

ருத்திராட்ச மணிகள் மீதுள்ள கோடுகளை முகம் என்று சொல்லுவார்கள்.

இந்த மணிகளுக்கு 1 முதல் 16 முகம் வரை உள்ளன என்று சொல்லப்பட்டிருக்கிறது. இவற்றை உடலில் அணிந்துகொள்வதாலும், உரைத்துப் பாலில் கலந்து உண்பதாலும் பல நன்மைகள் நமக்கு உண்டு என்று மருத்துவ நூல்கள் குறிப்பிடுகின்றன.

ருத்திராட்ச மணிகளைப் பட்டுக் கயிற்றிலோ, வெள்ளிச் சரட்டிலோ, பொற்கம்பியிலோ சேர்த்து மாலையாக அணிந்துகொள்ளலாம். ஒரு கோவை 32 மணிகளாக இருக்கலாம். ஜபமாலையாக இருந்தால் 54 அல்லது 108 ருத்திராட்ச மணிகளாக இருக்க வேண்டும். இந்த மாலைகளின் மத்தியில் ஒரு தனி மணி இருக்க வேண்டும். இதற்கு மேரு அல்லது நாயகமணி என்று பெயர்.

ஆசாரியர் உபதேசித்த வகையில் ருத்திராட்ச மணிமாலையை இரு கைகளையும் மார்பளவில் நிறுத்திப் பிடித்துக்கொண்டு ஒவ்வொரு மணியாக உருட்டித் திருஐந்தெழுத்தை ஜபிக்க வேண்டும். இது பற்றிய முழு விவரங்களையும் தக்க ஆசாரியரிடம் உபதேசம் மூலம் கேட்டுத் தெரிந்து கொள்ளவும்.

ஆயிரம் ருத்திராட்ச மணிகளை ஒருவர் அணிந்து கொள்வாரானால், அவர் சிவபெருமானுக்குச் சமமானவர் என்று புராணம் கூறுகிறது.

'விபூதி ஒரு சின்னமாக இருக்கும்போது, மற்றொரு சின்னமாக ருத்திராட்சம் எதற்கு?' என்று சிலர் கேட்கக்கூடும்.

விபூதிப் பூச்சு நம் உடலில் உண்டாகும் வேர்வையாலும், ஜன நெருக்கத்தாலும், மழையில் நனைய நேர்வதனாலும் அழிந்துவிடும். அப்போது நம்முடன் அவசியம் ருத்திராட்ச மாலை இருப்பது அவசியம். அவ்விதம் இருப்பதால் பல நன்மைகள் உண்டு.

இவற்றை அணிந்துகொண்டு பேறு பெற்ற வரலாறுகள் பல உண்டு. அறுபத்துமூன்று நாயன்மார்களுள் ஒருவர் மூர்த்தி நாயனார். அவர் விபூதி, ருத்திராட்சம் ஆகிய இரு சின்னங்களையும் அணிந்துகொண்டு இறைவன் அருள் பலத்தால் பாண்டிய நாட்டை ஆளும் அரச பதவியைப் பெற்றார் என்று பெரிய புராணம் பேசுகிறது.

## அட்ட மூர்த்தங்கள்



பிரிதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம், சூரியன், சந்திரன், ஆன்மா ஆகிய இவற்றை அதிட்டித்து நிற்கும் சக்திகள் சிவபெருமானின் வடிவங்களாகும். எனவே இவற்றை அட்ட மூர்த்தங்கள் என்பர்.

விக்கிரக வணக்கம் பிருதிவி ரூபமாகும். தீர்த்த வணக்கம் கங்கை போன்ற புண்ணிய நதி அப்பு. யாகத்தில் வழிபடும் அக்கினி அக்கினி ரூபம். சிவபூஜையில் செய்யப்படும் சூரிய சந்திரவழிபாடு சூரிய சந்திர ரூபமாகும். குரு, அந்தணர், சிவனடியார் போன்றவர்களை வழிபடுவது ஆன்ம ரூபமாகும். பஞ்சபூதத் தலங்களில் செய்யும் பஞ்சபூத லிங்க வணக்கம் பஞ்சபூத ரூபமாகும். இவ்வாறு சிவபெருமானின் அட்டமூர்த்த வணக்கம் விளங்குகிறது.

# ஸ்ரீ சீ தா ரா ம ன்

சுவாமி விவேகானந்தர்

இதிகாச காலத்தைச் சேர்ந்த புராதன பிரிய புருஷராவார் ராமர். அவர் சத்தியசொரூபி, தர்மசொரூபி, உத்தமப் புதல்வர், உத்தமக் கணவர், உத்தமத் தந்தை, எல்லாவற்றிற்கும் மேலாக உத்தம அரசர். வால்மீகி மகரிஷி நமக்கு இந்த ராமரைச் சித்திரித்துத் தந்துள்ளார்.

ஸ்ரீராமபிரானின் உன்னத வாழ்க்கையை மகாகவி வால்மீகி விவரித்துள்ள நடையைக் காட்டிலும் அதிகத் தூய்மையான, பரிசுத்தமான, அழகான, எளிய நடையைக் காணவே முடியாது.

சீதையைப்பற்றி என்ன சொல்வோம்! பழங் காலத்து உலக இலக்கியம் முழுவதையும் நீங்கள் துருவித் துருவி ஆராய்ந்தாலும் இன்னொரு சீதையைக் காண முடியாது என்று உறுதி கூறுவேன்.

நல்லது எதற்கும், தூயது எதற்கும், புனித மானது எதற்கும், பெண்மையின் மேன்மையான பண்புகள் அனைத்துக்கும் இந்தியாவில் சீதையின் பெயர் சிறந்த ஓர் எடுத்துக்காட்டாகத் திகழ் கிறது.

சீதை ஒரு தனிப்பிறவி. சீதை என்னும் அந்த மாதரசியை என்றென்றைக்குமாக மக்களின் முன்பு சித்திரித்துக் காட்டிவிட்டார் கவி.

ஒருவேளை ராமர்கள் பலர் இருந்திருக்கலாம். ஆனால் இரண்டாவது சீதையோ ஒருகாலும் இருந்ததில்லை. உண்மையான இந்தியப் பெண் மையின் பரிபூரணமான மாதிரியே ஆவாள் அவள். ஏனெனில் அந்தச் சீதையின் ஒரு வாழ்க்கையி லிருந்துதான் பரிபூரண நிலையடைந்த பெண் மணி ஒருத்தியைப் பற்றிய இந்திய லட்சியங்கள் யாவும் வளர்ந்து வந்துள்ளன.

இந்தப் பல்லாயிரம் ஆண்டுகளாக, பாரத தேசம் முழுவதும் ஒவ்வோர் ஆண், பெண், குழந்தையினுடைய பூஜையையும் ஏற்று இருந்து வருகிறாள் அந்தச் சீதை.

இந்த மகிமை வாய்ந்த சீதை, தூய்மையினும் தூய்மையுடையவளான சீதை, பொறுமையே உருவான சீதை, துயரமே அனுபவித்த சீதை என்றும் அந்த நிலையிலேயே இருந்து வருவாள்.

ஒரு முணுமுணுப்புங்கூட இன்றி, துயர் நிறைந்த அந்த வாழ்க்கையை அனுபவித்த அவளே, சதா பரிசுத்தமான, என்றும் தூய்மை யான பத்தினியாவாள். அவளே பெரியோர் களின் லட்சியமும், தேவர்களின் லட்சியமும் ஆவாள். அந்த மகா சீதையே என்றென்றும் நமது தேசீயத் தெய்வமாக இருக்க வேண்டியவ ளாவாள். நம்மில் ஒவ்வொருவரும் அவளை நன்கு அறிவோமாதலால் அவளைப்பற்றி விரி வாக நான் வர்ணிக்க வேண்டிய அவசியமில்லை.

நமது புராணங்கள் யாவும் மறையலாம், நமது வேதங்கள்கூட இல்லாது போகலாம், நமது சம்ஸ்கிருத மொழியும் ஒரேயடியாக மறையலாம்; ஆனால் இந்த நாட்டில் ஐந்தே ஐந்து ஹிந்துக் களேனும் உயிர் வாழும்வரை, அவர்கள் மிகவும் கொச்சையான நாட்டுப்புறப் பேச்சையே பேசுப வர்களாயினுங்கூட, சீதையின் கதை இங்கு இருந்துதான் வரும்.



நான் கூறுவதைக் கவனியுங்கள் : சீதை நமது இனத்தாருடைய உயிர்நிலைக்குள் இரண்டறக் கலந்துவிட்டாள். ஒவ்வொரு ஹிந்து ஆண் பெண்ணினுடைய உதிரத்திலும் சீதை இருக் கிறாள். நாம் யாவரும் சீதையின் குழந்தை களேயாவோம். நமது பெண்களை நவீனமாக்கும் முயற்சி எதுவும் அந்தச் சீதையின் லட்சியத்தி லிருந்து நம் பெண்களை அப்புறப்படுத்த முயலு மாயின் உடனே தோல்வியடைகிறது. இதைத் தினமும் காண்கிறோம்.

சீதையும் ராமனும்தாம் இந்திய நாட்டின் சிறந்த லட்சியங்கள் ஆவர். 'சீதையைப் போல் வாழ்வாயாக' என்று இந்தியாவில் புரோகிதர்கள் பெண்களை வாழ்த்துவது வழக்கம்.

இந்தியப் பெண்டிர் சீதையின் அடிச்சுவடு களின் வழியைப் பின்பற்றியே வளர்ந்து முன் னேற்றமடைய வேண்டும். அது ஒன்றே அவர் களுக்கு உள்ள ஒரே ஒரு வழியாகும். △




# நாமுவின் உள்ளம்

"மகனே! என் உன்னுடைய ஆடையில் ரத்தக்கறை படிந்திருக்கிறது? எங்காவது விழுந்து காயம் பட்டதா?" என்று தாய் அன்போடு கேட்டாள்.

"கோடாலியினுல் என் காலே வெட்டிப் பார்த்தேன்" என்று நாமு பதிலளித்தான்.

"நீ ஒரு மூடன். எவனுவது தன் காலேத் தானே வெட்டிக்கொள்வானு? உனக்குப் பித்துப் பிடித்துவிட்டதா என்ன?" என்று தாய் கோபத்தோடு கேட்டுக்கொண்டே மகனின் ஆடையை நீக்கிப் பார்த்தாள்.

காலில் பெரிய காயம் ஏற்பட்டிருந்தது. ஆனுல், நாமுவோ வலி சிறிதும் இல்லாதவனேப் போன்று உணர்ச்சியற்று நின்றிருந்தான்.

"என்ன வேலே செய்தாய், மகனே! காயம் இன்னும் சிறிது அதிகமாகப்பட்டிருந்தால் காலேயே துண்டிக்க வேண்டிய நிலேமை ஏற்பட்டிருக்குமே. ஏன் அவ்வாறு செய்தாய்?" என்ருள் அன்னே.

"அம்மா! அன்று பூவரசு மரத்தை வெட்டி அதன் மேல்மட்டையைப் பெயர்த்தேன். அதற்கு வலி ஏற்படுமோ என்ற சந்தேகம் என் மனதில் தோன்றியது. அதைத் தெரிந்து கொள்வதற்காக என் காலே வெட்டிப் பார்த்தேன். உண்மையை உணர்ந்தேன்" என்று விடையளித்தான் மகன்

பூவரசம் பட்டையைக் கொண்டுவருமாறு தாம் மகனே ஏவியது தாயின் நினேவிற்கு வந்தது. அவள் விம்மி விம்மி அழுதாள். நாமுவை அன்போடு அணேத்து, "மகனே! பிற்காலத்தில் நீ ஓர் உயர்ந்த சாதுவாக விளங்குவாய். இது திண்ணம்" என்று கூறிப் பின், "மரங்களிடமும் ஏனேய உயிரினங்களிடமும் நம்மிடம் இருக்கும் ஜீவன்தான் இருக்கிறது. நமக்கு ஏற்படும் உணர்ச்சிகள் அவற்றிற்கும் ஏற்படும். பட்டையைப் பெயர்த்தால் மரத்திற்குத் துன்பம் உண்டாகும்" என்று கூறினுள்,

அந்த நாமுதான் பிற்காலத்தில் மகான் நாமதேவர் என அழைக்கப்பட்டார்.



# சிரித்தது ஏன் ?

ஓர் ஊரில் அரசி ஒருத்தி இருந்தாள். அவளுக்குத் தினமும் படுக்கையறையைச் சுத்தம் செய்து, படுக்கை விரிப்பதற்கு ஒரு பணிப்பெண் இருந்தாள். கோடைநாட்களில் அரசி ஆற்றங்கரையிலிருந்த அரண்மனை ஒன்றில் வந்து தங்குவது வழக்கம். பகலில் உணவுக்குப் பின் சிறிது நேரம் அந்த ராணி படுத்து ஓய்வு எடுப்பது வழக்கம்.

ஒரு நாள் அந்தப் பணிப்பெண் ராணி படுப்பதற்காகக் கட்டிலில் படுக்கையை விரித்தாள். கடுமையான வெயிலினாலும், பசியினாலும், உழைப்பினாலும் பணிப்பெண் மிகவும் களைத்துப் போயிருந்தாள். அருகில் பெருகும் ஆற்றின் குளுமையையும், தோட்டத்தில் உள்ள மலர்களின் மணத்தையும் சேர்த்து மிருதுவான தென்றல் காற்று அந்த அறையில் வீசிற்று. அந்தக் காற்று, பணிப்பெண்ணின் சோர்வுக்கு மிகவும் இதமாக இருந்தது.

ஒரு நாளாவது ராணியின் படுக்கைச் சுகத்தைத் தான் அனுபவித்துப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் அவளுக்கு நீண்ட காலமாக இருந்து வந்தது. அன்று அந்தப் படுக்கையில் படுத்தாள். என்றும் அறியாத இன்பத்தை உணர்ந்த அந்தப் பணிப்பெண் தன்னையும் மறந்து அயர்ந்து தூங்கிவிட்டாள்.

ராணி வந்து பணிப்பெண் தூங்கும் காட்சியைப் பார்த்தாள். அவளுக்குச் சொல்ல முடியாத கோபம் வந்தது. ஆகவே அவள் ஆத்திரத்தோடு பணிப்பெண்ணுக்கு ஓர் அடி கொடுத்தாள். பணிப்பெண் கண்விழித்துப் பார்த்து நிலைமையை உணர்ந்தாள். தன் தவற்றை உணர்ந்து மௌனமானாள். அரசியோ கோபம் தணியாமல் அவளைத் திட்டிக் கடுமையாக அடிக்கவும் செய்தாள்.

பணிப்பெண் முதலில் அழுதாள். பிறகு திடீரென்று சிரித்தாள். பணிப்பெண் சிரித்ததும் அரசியின் கோபம் மேலும் அதிகமாயிற்று. சிரிப்பின் காரணம் என்ன என்று அரசி வினவினாள். அதற்குப் பணிப்பெண் கைகளைக் கூப்பி, ''அரசி! என்னை மன்னிக்க வேண்டும். ஒரே ஒரு நாள் சில விநாடிகள் இந்தக் கெட்ட படுக்கையில் படுத்ததனால் இவ்வளவு வசைமொழிகளையும் அடிகளையும் பெற்றேன். இந்தப் பாழாய்ப்போன படுக்கையில் ஆயுள் முழுவதும் தூங்கும் நீங்கள் எவ்வளவு அதிகமான திட்டுக்களையும் அடிகளையும் பெற வேண்டுமோ! ஈசனே அறிவார். நீங்கள் இந்தப் பிறவியில் பெறாவிட்டாலும் வட்டியும் முதலுமாக அடுத்த பிறவியில் இவற்றைப் பெற்றே ஆகவேண்டும். இதை அறியாமல் என்னைத் துன்புறுத்தும் உங்கள் அறியாமையை எண்ணினேன். எனக்குச் சிரிப்பு வந்துவிட்டது'' என்று கூறினாள்.

பணிப்பெண் சொன்னதைக் கேட்டதும் அரசிக்கு, கடவுளின் பார்வையில் தானும் மற்றவர்களைப் போன்று ஒரு ஜீவன்தான் என்ற உண்மை விளங்கியது. தான் ஓர் அரசி என்ற அகம்பாவத்தையும் அவள் அன்றே கைவிட்டாள்.

***மயிலை, ஸ்ரீராமகிருஷ்ண மடத்தின் சார்பாக, 'பக்திக் கதைகள்' என்ற நூல் அடுத்த மாதம் வெளிவர இருக்கிறது. அதில் இடம் பெற்றுள்ள இரண்டு கதைகள் இந்த இதழின் சிறுவர் பகுதியில் வெளிவந்துள்ளன.***



# பஞ்சாயதன பூஜை

ராஜம் ஜயராமன்

இந்து சமயத்தில் வழிபாட்டு முறை மிகச் சிறப்பான முறையில், தத்துவரீதியாக வரை யறை செய்யப்பட்டுக் கடைப்பிடிக்கப்படுகிறது. சாதாரண நிலையிலுள்ள பாமர மக்களையும் பக்தி வழியில் ஈடுபடுத்திப் பரம்பொருளின் ஆற்றலையும், பரம் பொருள் எவ்வாறு செயற் படுகிறது என்பதையும் உணர வைக்கிறது. இந்து சமயத்தில் ஐந்து வகையான வழிபாட்டு முறைகள் சொல்லப்படுகின்றன.

எல்லாப் பொருள்களுக்கும் ஆதாரமாகவும், மூலமாகவும், எல்லாவற்றையும் கடந்தும், அனைத்தினுள்ளும் மூல உட்பொருளாய் உள்ள பரம்பொருள் ஒன்று உண்டு; இதனையே கடவுள் என்று அழைப்பது இந்து சமயத்தின் அடிப்படைக் கொள்கைகளில் ஒன்ருகும்.

இந்த ஒரே பரம்பொருளின் பல்வேறு சகுணத் தோற்றங்களே இன்று நாம் வணங்கும் அனைத்துத் தெய்வங்களும் ஆகும். பரம் பொருளின் ஆற்றல் கணபதி, சூரியன், சிவன், சக்தி, விஷ்ணு போன்ற பல்வேறு நிலைகளில் வெளிப்படுகிறது. இதனையே இந்துக்கள் ஐந்து தேவதைகளாக வைத்து வழிபடுகிருர்கள். இதற்குப் பஞ்சாயதன பூஜை என்று பெயர்.

பாரமார்த்திக நலன்களுக்காகவும் முக்திக் காகவும் செய்கிற இந்த வழிபாட்டு முறையில் அவரவர் தங்கள் மனவளர்ச்சிக்கு ஏற்றவாறு ஏதேனும் ஒரு தெய்வத்தைத் தமது உபாசஞ மூர்த்தியாகத் தேர்ந்தெடுத்து, அதனை மத்தியில் வைத்து, மற்ற மூர்த்திகளைச் சுற்றிலும் வைத்து வழிபடுவர்.

இவ்வாறு பல உருவங்களில் செய்யும் வழி பாட்டை ஒன்றுபடுத்துகிற பஞ்சாயதன பூஜைக்கு ஆதாரமான மூர்த்தி பேதங்களைப்பற்றி விநாயக புராணம், சூரியபுராணம், சிவபுராணம், தேவிபாகவதம், மகாபாகவதம், விஷ்ணு புராணம் ஆகிய நூல்கள் விளக்குகின்றன.

**கணபதி :** நமது நாட்டின் எல்லாப் பகுதி மக்களும் விரும்பி வழிபடும் தெய்வம் பிள்ளையார். அவரது திருவுருவத்தைக் கோயில்களிலும் வீடு களிலும் தெருமுனைகளிலும் ஆறு குளங்களின் கரைகளிலும் புனிதமான மரங்களுக்கடியிலும் பிரதிஷ்டை செய்து வழிபடுவதைக் காணலாம். கணபதி அறிவு, ஆற்றல், எழுத்து இவற்றுக்கு அதிபதியாவர். மனிதர்களுக்குத் தடையை ஏற்படுத்துகிறவரும் பின்பு அவற்றை நீக்கு பவரும் இவரே. எனவே இவரை விக்கினேச் வரர், விநாயகர் என்று அழைப்பர். இவரது உருவத்தையும் ஆற்றலையும் விளக்குவனவாகப் பல பெயர்கள் அமைந்துள்ளன. வேள்விகள் யாவும் தடையின்றி நடைபெற மக்கள் இவரது அருளையே வேண்டி நிற்பர். இவரது அருளால் துன்பங்களும் தடைகளும் நீங்குகின்றன.



**சூரியன்:** ஆகாயமண்டலத்தின் அதிஷ்டான தேவதையாக (மூலக் கடவுளாக)ச் சூரியனே விளங்குகிருன். பேரொளிக்கும் பேராற்ற லுக்கும் பருப்பொருளாய் அமைந்த வடிவம் சூரியதேவனே ஆவான். 'தேவர்களின் கண்' என்று சூரியனை வேதம் வர்ணிக்கிறது. இவன் அனைத்தையும் காணக்கூடியவன். தினத்தை உண்டாக்குவதனல் இவனைத் தினகரன் என்பர். இவனே உலகின் மூச்சுக் காற்றிற்கு உறைவிட மானவன். மக்கள் இவனைச் சந்தியாவந்தனம் மூலமாக அர்க்கியம் அளித்து வழிபடுகின்றனர்.

**சிவன் :** பிரபஞ்சத் தோற்றத்திற்கும் லயத் திற்கும் காரணமாக இருப்பவன் சிவன். சிவனை வழிபடும் நெறியே சைவ நெறியாகும். சிவனை ருத்திரன், சங்கரன், மஹேச்வரன்

என்னும் பெயரில் வழிபடுவர். ரிக்வேதம் சிவபெருமானை ருத்திரனாகப் போற்றுகிறது. ஸாயணர், 'ருத்ரன்' என்பதற்கு, 'பாவத்தையும் துன்பத்தையும் ஓட்டுபவன்' என்று பொருள் கூறுகிறார். ச்வேதாச்வதர உபநிஷத்தில், ''ருத்திரனே கடவுள். அவனுக்கு இணையான வேறு கடவுள் இல்லை. அவன் தன் ஆற்றலால் எல்லா உலகங்களையும் ஆள்கிறான். எல்லாப் பொருளையும் படைக்கிறான், காக்கிறான், கால முடிவில் அவற்றை ஒடுக்கிக்கொள்கிறான்'' என்று சொல்லப்பட்டிருக்கிறது.

**சக்தி :** சிவன் அறிவின் ஆதாரம்; சக்தி அதன் இயக்கம். இவளே மூலசக்தியின் இயக்கமாக இருந்து பிரபஞ்சத்தின் சிருஷ்டி ஸ்திதி லயம் ஆகிய நிலைகளில் நின்று இயக்கு கிறாள். ''நான் பிரம்மஸ்வரூபிணி. என்னி லிருந்து இந்த உலகம் தோற்றம் கொள்கிறது'' என்று தேவிபாகவதத்தில் தேவி கூறுகிறாள்.



**விஷ்ணு :** அண்ட சராசரங்களிலும் பரவி யிருக்கிற சக்தியே விஷ்ணு. இவரே உலகைக் காக்கும் கடவுள். இவரைப் புருஷோத்தமன், நாராயணன் என ஆயிரம் பெயர்களால் போற்றி வழிபடுகின்றனர். எங்கும் பரவிய கடல் நீலம்; எங்கும் பரவிய வானம் நீலம்; ஆகையினால் எங்கும் பரவிய விஷ்ணுவும் நீலவண்ணர்.

ஆகாயத்தில் இருக்கும் ஆதித்திய மண்டலம் சூரியனின் இருப்பிடமாகவும், கணபதிக்கும் சிவனுக்கும் கைலாயமும், சக்திக்கு மணித்வீப மும், விஷ்ணுவிற்கு வைகுண்டமும் இருப்பிடங் களாகவும் கூறப்பெறுகின்றன.

**தத்துவ விளக்கம் :** இந்தப் பஞ்சாயதன பூஜைக்குத் தத்துவரீதியாகவும் விஞ்ஞான அடிப் படையிலும் விளக்கங்கள் சொல்லப்படுகின்றன. அனைத்திற்கும் ஆதாரமாக உள்ள பரம்பொருளி லிருந்து முதலாவதாக, சப்தம் (நாதம்) தோற்ற மெடுக்கிறது. உலகில் நாம் கேட்கும் ஒலிகளுக் கெல்லாம் மூலமாக உள்ள ஒலிகள் 'அ-உ-ம்' என்ற மூன்றே. இவை மூன்றும் இணைந்த 'ஓம்' என்ற பிரணவப் பொருளே பிரம்மத்தி லிருந்து எழுந்த முதல் தோற்றம் என்று வேதம் கூறுகிறது. இதனை இன்றைய விஞ்ஞானமும் 'சப்தத்திலிருந்து உலகப் பொருள் அனைத்தும் தோற்றம் எடுக்கிறது' என்று ஏற்றுக்கொண் டுள்ளது. எனவே பிரணவத்தின் சின்னமாகக் கணபதியை மனதில் இருத்தி வழிபடத் துவங் கினர். எனவேதான் விநாயகப் பெருமான் பிரணவசொரூபமாகப் போற்றப்படுகிறார்.

சப்த அலையிலிருந்து ஒளி (விந்து) தோற்றம் எடுக்கிறது. ஒளிமிக்க தீக் கதிர்களின் கூட்டம் தான் சூரியன். வானவெளியில் நாம் காணும் பூமண்டலம் முதல் அனைத்துக் கோளங்களும் சூரியனிலிருந்து உருவெடுக்கின்றன. இதனை விஞ்ஞானமும் ஏற்றுக்கொள்கிறது. பிரணவ வடிவான கணபதியின் வழிபாட்டிற்கு அடுத்து, ஒளிப் பிழம்பான சூரியதேவன் வழிபடப்படு கிறான்.

சூரியனிலிருந்து சிதறித் தெறித்த தீக்கனல்கள் காலப்போக்கில் குளிர்ந்து கட்டியாகி இவ்வுலகம் தோன்றியதாகவும், முதலில் ஒரு கற்கோள மாகத்தான் பூமி அசையாமல் இருந்திருக்கிறது என்றும் விஞ்ஞானம் கூறுகிறது. உலகத் தோற்றத்துக்கு ஆதாரமாக உள்ளவன் சிவன். யோகத்தில் ஆழ்ந்திருக்கும் சிவனே அசைவற்ற தன்மையைக் குறிக்கிறான். சிவன் தான் ஆடாமல் அண்ட சராசரங்களை ஆடவைக்கிறான். உலகப் படைப்பின் மூலமாகிய அசேதன நிலையில் சிவனை வழிபடுகிறோம்.

அசையாப் பொருளான சிவத்திலிருந்து ஆற்றலின் வடிவான சக்தி பிறக்கிறது. சிவன் பிரபஞ்சத் தோற்றத்திற்கு அடிப்படையாக அமையும்போது, சக்தி அதனை இயக்கும் தத்துவ மாக விளங்குகிறாள். கல்லிலிருந்து மண், நீர், காற்று, உயிரினங்கள் முதலியவை தோன்றி,

சைதன்யம் எங்கும் வியாபிக்கிறது. எனவே சக்தி வழிபாடு ஏற்படுகிறது.

'விஷ்ணு' என்பதற்கு, 'எங்கும் பரவியவன்' எனப் பொருள். இந்தத் தோற்றங்கள் யாவும் அண்டசராசரம் அனைத்திலும் பரவி நிற்கிறது. எனவே இதனை 'விஷ்ணு' என வழிபடுகிறோம்.

மேற்குறிப்பிட்டவாறு, பிரம்மம் எனப்படும் பரம்பொருளிலிருந்து பிரபஞ்சத் தோற்றமாக உருவெடுக்கும் பேராற்றலை விஞ்ஞான ஆராய்ச்சி இன்று நிருபித்துக் கொண்டிருக்கின்றது. ஆனால் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே மெய்ஞ் ஞான ஆராய்ச்சிமூலம் இதைக் கண்டறிந்த நமது ஞானிகள் இந்தத் தத்துவத்தைப் பாமர மக்களும் புரிந்துகொள்ளும் விதத்தில் பஞ்சா யதன பூஜைமூலம் நமக்கு வகுத்துக் கொடுத் துள்ளனர்.

மனிதனை அறிவுகடந்த இறைநிலைக்கு உயர்த்த உதவும் இந்தப் பஞ்சாயதன வழிபாட்டு முறையில் நாம் விடுகளில் ஐந்து மூர்த்திகளையும் வைத்து வழிபட்டு வருகிறோம். விக்கிரகங்களாக இல்லாமல் இயற்கையில் கிடைக்கும் ஐந்து பொருள்களில் ஆவாகனம் செய்து நம் முன்னோர் பூஜை செய்து வந்தனர்.

நர்மதை நதியில் ஓங்கார குண்டத்தில் கிடைக்கும் பாணலிங்கத்தைச் சிவனாகவும், ஸ்வர்ணமுகி நதியில் கிடைக்கும் ஸ்வர்ணமுகி சிலா என்ற கல்லைச் சக்தியாகவும் (இந்தக் கல்லில் ஸ்வர்ண ரேகை காணப்படும்), நேபாளத்திலுள்ள கண்டகி நதியிலிருந்து கிடைக் கும் சாலக்கிராமத்தை விஷ்ணுவாகவும், தஞ்சைக்கு அருகில் கிடைக்கும் ஸ்படிகத்தைச் சூரியனாகவும், சோணபத்திர ஆற்றில் காணும் சோணபத்திரக் கல்லைக் கணபதியாகவும் ஒரே இடத்தில் வைத்துப் பூஜித்து வந்தனர். இது மிகவும் விசேஷமாகக் கருதப்படுகிறது.

மனிதனின் மனத்தன்மைக்கு ஏற்றவாறு பரம்பொருளைப் பலவேறு வடிவங்களில் வழிபடுவதற்கான இந்தச் சுதந்திரத்தை இந்து தர்மம் அளிக்கிறது. 'எந்த உருவில் வழிபட்டா லும் அந்த வழிபாடு இறுதியில் ஒரே பரம் பொருளைச் சென்றடைகிறது' என்கிறது சிவ மஹிம்ன ஸ்தோத்திரம். △

---



## எது சாதனை?

ஒரு சிஷ்யன் குருவைப் பார்த்து, ''பிரபோ! பகவானை அடைய நான் என்ன சாதனை செய்யலாம்?'' என்றான்.

குரு, ''நீ வேகமாக ஓடு. ஓடுவதற்கு முன் மனதில் நிச்சயப் படுத்திக்கொள், நான் பகவானுக்காக ஓடுகிறேன் என்று. அதுதான் உனக்குச் சாதனை'' என்றார்.

''உட்கார்ந்தே செய்யக்கூடிய சாதனை ஒன்றும் கிடையாதா?'' என்று கேட்டான் சிஷ்யன்.

குரு, ''யார் இல்லையென்று சொன்னார்கள்? உட்கார்; ஆனால் உட்கார்ந்திருக்கும்போது பகவானுக்காக உட்கார்ந்துகொண்டிருக் கிறேன் என்று நினைத்துக்கொள்'' என்றார்.

''ஜபம் ஒன்றும் பண்ணுவதற்குக் கிடையாதா?'' என்று கேட் டான் சிஷ்யன்.

''ஏதாவது ஒரு நாமத்தைச் சொல்லிக்கொண்டிரு. ஆனால் சொல்லும்போது, பகவானுக்காகச் சொல்கிறேன் என்ற ஞாபகம் இருக்க வேண்டும்'' என்றார் குரு.

''நீங்கள் சொல்வதைப் பார்த்தால் கிரியைக்கு எந்த மகத்துவ மும் கிடையாது; பாவனைக்குத்தான் மகத்துவம் என்று சொல்வது போலல்லவா இருக்கிறது?''

குரு, ''கிரியைக்கும் மகத்துவம் இருக்கிறது; ஏனென்றால் கிரியை யினால்தான் பாவனை உண்டாகிறது. ஆகவே நம் திருஷ்டி ஒரு லட்சியத்தினிடத்தில் இருக்க வேண்டும். அப்பொழுது நாம் செய்வ தெல்லாம் சாதனையாகிவிடும்'' என்றார்.




## இந்து முஸ்லிம் கலவரம் — ஓர் உரையாடல்

[பேலூர் மடத்தில் 1930-ஆம் ஆண்டு ஆகஸ்ட் 5-ஆம் நாள் செவ்வாய்க்கிழமையன்று, ஸ்ரீராமகிருஷ்ணரின் சீடராகிய சுவாமி சிவானந்தருக்கும் அந்த மடத்தைச் சேர்ந்த ஒரு துறவிக்கும் அப்போது இந்து-முஸ்லிம் கலவரம் விஷயமாக நடந்த உரையாடல் இங்கு இடம் பெறுகிறது.]

டாக்காவில் நடந்து வரும் இந்து - முஸ்லிம் கலவரத்தால் பாதிக்கப்பட்டவர்களின் கஷ்ட எவாரணத்திற்காக இராமகிருஷ்ண மிஷனின் சார்பாக ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. நில்லாத் தினசரிப் பத்திரிகைகளிலும் பண உதவிக்காக வேண்டுகோள் விடப்பட்டிருந்தது. வழக்கம் போலப் பலர் தங்களுடைய வணக்கத்தைச் செலுத்தும்பொருட்டு மகாபுருஷ்ஜியின் (ஸ்ரீமத் சுவாமி சிவானந்தரின்) அறையில் கூடியிருந்தனர். அப்போது அந்த மகான் தம்மை வணங்கிய துறவி ஒருவரிடம், ''கஷ்ட நிவாரணத்திற்குப் போதிய பண உதவி உன்னிடம் வருகிறதா?'' என்று விசாரித்தார்.

துறவி : இல்லை, மகராஜ். அவ்வளவு அதிகமில்லை.

மகாபுருஷ்ஜி : பணத்தைப்பற்றிக் கவலைப் படாதே. அது மெல்ல மெல்ல வரும். அது அவருடைய (ஸ்ரீராமகிருஷ்ணருடைய) செயல். வேண்டிய நிதியை அவர் திரட்டித் தருவார்.

துறவி : பணம் வரக் கஷ்டமும் உள்ளது. இத்தகைய முயற்சிகளில் மனதை அமைதியாக வைத்திருப்பது கடினமாக இருக்கிறது. இந்தத் துஷ்டர்கள் செய்திருக்கும், மனித இயல்பிற்கே பொருந்தாத கொடுமைகளை என்னவென்று சொல்வது?

மகராஜ் : ஆம், உண்மைதான். ஆனால் குழந்தாய், பிறருக்குத் தொண்டு செய்வதன் மூலமாக நமது உள்ளங்களைத் தூய்மைப்படுத்திக் கொள்வதே நாம் செய்ய வேண்டிய பணியாகும். சுவாமிஜி (விவேகானந்தர்) கூறியபடியே, 'பிறருக்கு நன்மை செய்வதனால் நமக்கு நாமே நன்மை செய்துகொள்கிறோம்.' நமது பணியின் நோக்கமாவது, பிறருக்கு உதவி செய்து நமது சொந்த ஆன்மிக நன்மையை வளர்ப்பதேயாகும். இம்மாதிரி வேலையில் ஈடுபடும்போது, ஒருவன் தன்னைத் தானே சோதித்துக்கொள்ள இயலும். புறத்தளவில் எத்தனை சோதனைகளும் கஷ்டங்களும் வந்தாலும், மனம் தொந்தரவடையாமல் குருதேவரின் பணியை நீ செய்துவர வேண்டும். 'ஒருவனது சுய முக்திக்காகவும் உலக மக்களின் நன்மைக்காகவும்' — இதுவே உனது வாழ்க்கை இலட்சியமாகும். உனது பார்வை உயர்ந்த பொருளை நோக்கிச் செலுத்தப்பட வேண்டும். உனது லட்சியம் மேன்மையாக இருப்பது போல், உனது இதயமும் பரந்து விரிந்ததாக இருக்க வேண்டும்.

இந்தச் சாதிமதக் கலவரங்களுக்கும் வேற்றுமைகளுக்கும் பின்னால் எல்லா நன்மைகளையும் அருளும் ஜகன்மாதாவின் திருக்கரத்தையே நான் காண்கிறேன். அம்பிகையின் கருணையார்ந்த திருவுள்ளப்படியே இவை எல்லாம் நிகழ்கின்றன; முடிவில் இது நன்மையாகவே முடியும். இந்துக்களுக்குள் ஒற்றுமையை உண்டுபண்ண இது வழியாகும். அவர்கள் ஓர் உடலின் பல அங்கங்களைப் போல ஒன்றுபட்டு ஒரே சமூகமாக வாழக் கற்றுக் கொள்வர். அப்போது அவர்கள் ஒருவருக்கு

ஒருவர் அனுதாபம் கொள்ள முயல்வர். ஒற்றுமை, சமூக அமைப்பு, பிறரிடம் அனுதாபம்-இவையே இப்போது முக்கியமாக மிகவும் தேவைப்படுகின்றன. **எல்லாவற்றிற்கும் மேலாக, இந்துக்கள் ஒன்றுகூடி ஒரே சமூகமாகித்** தங்களுக்குள் ஒற்றுமையோடு வாழ வேண்டும். அவ்வளவு நெடுங்காலமாக நிலைத்திருந்த அசட்டையும் குறுகிய மனப்பான்மையும், வெளியிலிருந்து ஒரு கட்டாயம் ஏற்பட்டாலன்றி ஒழியுமா? எல்லாம் அம்பிகையின் திருவுள்ளப்படியே நடக்கின்றன என்றும், இந்து சமூகத்திற்கு இது நன்மையை வளர்க்கும் என்றும் நம்புங்கள். நாடு முழுவதிலும் இதனால் ஒரு புதிய விழிப்பான நிலை உண்டாகும். ஸ்ரீராமகிருஷ்ணரும் சுவாமி விவேகானந்தரும் இந்துக்களிடையிலே பிறந்ததனால், இந்துக்கள் எல்லா வகையிலும் செழிப்படைவார்கள்.

ஸ்ரீராமகிருஷ்ண மடத்தைச் சேர்ந்த சுவாமி விஜயானந்தர், மாலையில் சுமார் ஐந்து மணிக்குக் கல்கத்தாவிலிருந்து வந்தார். அவர் மகாபுருஷ்ஜி சுவாமி சிவானந்தரின் அறைக்குள் புகுந்து, ''மகாராஜ், ஒரு பிரபு கஷ்ட நிவாரணத்திற்காக ஐந்நூறு ரூபாய் கொடுத்துவிட்டு, அவசியமானால் இன்னும் தருவதாக வாக்களித்திருக்கிறார்'' என்று தெரிவித்தார்.

இந்தச் செய்தியைக் கேட்டதும், மகாபுருஷ்ஜி சந்தோஷமடைந்தார். கைகூப்பிக் கண்ணை மூடியவராக அவர் பின்வருமாறு கூறினார்:— ''ஜகன்மாதாவுக்கு வெற்றி உண்டாகுக! அம்பிகையின் லீலைகளை எவரால் அறிந்துகொள்ள முடியும்? அம்பிகையே ஒரு வடிவத்தில் துன்பத்தை உண்டாக்குகிறாள். மீண்டும் அவளே மற்றொரு வடிவத்தில் மக்களின் மனதில் தயையைத் தோற்றுவிக்கிறாள். 'ஒவ்வோர் உயிரிடமும் தயை வடிவமாகத் திகழும் தேவிக்கு வணக்கம்.' ஒரு கையால் அவள் கொல்லுகிறாள்; மற்றொரு கையால் அவள் மக்களுக்கு வரங்களைத் தந்து, அபயமளிக்கிறாள். 'அன்னை காளிதேவியே பரம்பொருளின் தன்மையை முழுமையாக வெளிப்படுத்தும் வடிவம்' என்று சுவாமிஜி சொல்வது வழக்கம்.

''ஆக்கல், அளித்தல், அழித்தல் என்ற முத்தொழிலையும் இயற்றுபவள் அவளே. ஒரு பக்கம் அவள் வாளால் அழிக்கிறாள்; மற்றொரு பக்கம் வரம் கொடுத்து, மக்களுக்கு 'அஞ்சேல்' என்னும் அபயமொழி கூறுகிறாள். இவையனைத்தும் கடவுளின் திருவிளையாடலே. அம்பிகை ஒரு வடிவத்தில் எத்தனையோ மக்களுக்குப் பஞ்சம், நோய், துயரம் என்பவற்றால் பீடையை உண்டுபண்ணுகிறாள்; மற்றொரு வடிவத்தில் மன்னுயிர்களின் துன்பத்தை நீக்கும்படி மக்களின் உள்ளத்தில் ஆவேசம் ஊட்டுகிறாள். 'தாயே, உன் புகழ் ஓங்குக! உனக்கே புகழ் உண்டாகுக! உனது லீலைகளை யாரால் புரிந்துகொள்ள முடியும்?' அம்பிகையின் திருவுள்ளத்தை அறிந்துகொள்ளும் வல்லமை பெற்றவர்கள் எவரும் இதுவரையில் இருந்ததில்லை. இனியும் எப்போதும் இருக்கப்போவதில்லை. படைப்புக் காலம் தொடங்கியது முதல் இன்று வரையிலும் தேவியின் திருவுள்ளத்தை எந்த யோகியாலும் மகானாலும் அறிந்துகொள்ள முடியவில்லை. தேவியின் லீலைக்கு வரையறை ஏது?

''நீ கிருபைகூர்ந்து தரிசனம் தராவிட்டால், தேவி, உன்னை யாரால் அறிந்துகொள்ள முடியும்? வேத வேதாந்தங்களும் உன்னை உணர்ந்துகொள்ள இயலாமல், இருளிலே வழி தடவித் திரிகின்றன.''

இதனால்தான் குருதேவர், ''தாயே! உன்னை நான் அறிந்துகொள்ள முயலவில்லை. உன்னை யாரால்தான் அறிந்துகொள்ள முடியும்? உன்னை அறிந்தவர் எவரும் இல்லை. இனியும் எப்போதும் உன்னை அறிந்துகொள்ளப்போகிறவர் எவரும் இருக்கப்போவதில்லை. ஆதலால், இந்த உலகத்தை மயக்கும் உனது மாயையில் நான் மயங்காமல் இருக்க அருள் புரிவாயாக'' என்று பிரார்த்திப்பது வழக்கம்.

மகாபுருஷ்ஜி ஜகன்மாதாவை நினைத்துக் கைகூப்பி வணங்கியபடி பின்வருமாறு கூறினார். ''தாயே, பக்தியையும் நம்பிக்கையையும் எங்களுக்குத் தந்தருள்வாயாக. பக்தியையும் நம்பிக்கையையும் எங்களுக்குத் தந்தருள்வாயாக.'' ∴

---

கடவுளை அறிந்து அன்பு செலுத்துவோருக்கு அவரைப்பற்றிச் சலிப்புத் தட்டுவதே இல்லை.

—ஹெலன் கெல்லர்



# சங்கரர் ஆற்றிய பணி

வி. ஆர். கல்யாணசுந்தர சாஸ்திரிகள்

### சங்கரர் – லோக சங்கரர்

'சங்கரர்-உலகத்திற்கு நன்மையைச் செய்பவர்' என்பது இந்தச் சொல்லின் பொருளாகும்.

ஆயினும் 'சங்கரர் லோக சங்கரர் (சிவபெருமான் உலகிற்கு நன்மையைச் செய்பவர்) என்பது இதன் பொருளா, அல்லது சங்கரரே லோக சங்கரர் (ஆதிசங்கரர் உலகிற்கு நன்மையைச் செய்பவர்) என்பது இதன் பொருளா?' என்ற கேள்வி எழுமானுல் இரண்டுமே இதன் பொருள் என்பதுதான் இந்தச் சொல்லுக்கும் பதிலாகும்.

இங்கே 'சம்' என்பது சிற்றின்பத்தைக் குறிக்குமிடத்து முதல் பொருள். அதுவே பேரின்பத்தைக் குறிக்குமிடத்து இரண்டாம் பொருள்.

ஸ்தூலம் சூட்சுமம் எனப்படும் இரண்டு உடல் தொடர்பு கொண்டு ஆன்மா அனுபவிக்கும் ஐஹிகம் (இவ்வுலகத்தியது), ஆமுஷ்மிகம் (அவ்வுலகத்தியது) எனப்படும் சுகமே சிற்றின்பமாகும். பிரவிருத்தி மார்க்கமான இதை அடையும் வழிகளை வகுத்துச் சங்கரரும் மற்றவரும் இந்த உலகத்திற்குக் கொடுத்திருக்கிறார்கள்.

இந்த இரண்டு உடல்களுடன் தொடர்பற்று ஆன்மா அனுபவிக்கும் சுகமே பேரின்பமாகும். நிவிருத்தி மார்க்கமான இதை அடையும் வழிகளை வகுத்துச் சங்கரர் ஒருவரே இந்த உலகத்திற்குக் கொடுக்கிறார்.

இங்கே சங்கரர் என்பது கைலாசபதியான சங்கரரையும் ஆதிசங்கரரையும் குறிக்கும். இந்த இருவரிடமும்தான் இந்தத் தன்மை உள்ளது என்பதை எடுத்துக் காட்டுவதே இந்தக் கட்டுரையின் நோக்கம்.

### கைலாசபதி சங்கரர்

சிவநாமங்களைத் தொகுத்துக் கூறும் இடத்தில் தான் அமரகோசம் என்னும் நிகண்டுவில், 'ஈச்வர: சர்வ: ஈசாந: சங்கர: சந்த்ரசேகர: இவையெல்லாம் ஒரே சிவனின் வேறுபட்ட திருநாமங்களாகும்' என்று கூறப்பட்டுள்ளதேயன்றி, வேறு எந்த இடத்திலும் இல்லை.

இதிலிருந்து சங்கர: என்னும் பெயர் கைலாசபதியான பரமேசுவரனையே குறிக்கிறது என்பது தெளிவாகிறது.

### பெயர் வகை

இடுகுறிப் பெயர், காரணப் பெயர், காரண இடுகுறிப் பெயர் என்று பெயர் வகைகளுள் முக்கியமாக மூன்று வகைகள் உள்ளன. அவற்றுள் சங்கரர் என்னும் இந்தப் பெயர் சிவபெருமானுக்குக் காரண இடுகுறிப் பெயராக அமைந்துள்ளது.

காரணம் கருதும்பொழுது, ஒரு பெயர் அந்தக் காரணத்தையுடைய பல பொருள்களைக் குறிப்பதாக இருந்தாலும், அந்தப் பொருள்களுள் ஒன்றுக்கே இட்டு வழங்கப்படும் பெயர் காரண இடுகுறிப் பெயர் எனப்படும். சம்ஸ்கிருத மொழியில் இந்த வகைப் பெயரை 'யோகாரூடம்' என்பர்.

'பங்கஜம்' என்னும் பெயர் அதற்கு உதாரணமாகும். பங்கஜம் என்ற பதம் சேற்றில் உண்டாகும் பொருள்கள் யாவற்றையும் குறிக்க வல்லதாயினும், தாமரை ஒன்றுக்கே இட்டு வழங்கப்படும் பெயராக அமைந்துள்ளது.

அதுபோல, இந்தச் 'சங்கர' என்னும் பெயரும் சிவபெருமான் ஒருவருக்கே காரண இடுகுறிப் பெயராக இட்டு வழங்கப்பட்டு வருகிறது.

### பெயர் விளக்கம்

'சங்கர' என்னும் பதத்துள் முன்கூறிய இரண்டு வகையான சுகத்தையும் குறிக்கும் 'சம்' என்ற ஓர் அவ்யயமும், செய்வினையைக் குறிக்கும் 'க்ரு' என்னும் ஓர் தாதுவும், 'சமிதாதோ:

ஸம்ஜ்ஞாயாம் சம் என்ற வினைச்சொல்லிலிருந்து இந்தப் பெயர் தோன்றிற்று' என்னும் பாணினி ஸூத்திரத்தால் வந்துள்ள 'அச்' என்னும் ஓர் ப்ரத்யயமும் அடங்கியுள்ளன. இதனைச் சம்ஸ்கிருத மொழியில் வ்யுத்பன்ன பதம் என்றும், தமிழ்மொழியில் பகுபதம் என்றும் கூறுவர். 'சம்'-இரண்டு வகையான சுகத்தையும், 'கரோதி'-தனக்கின்றி ஏனையோருக்கும் செய்கிறார், 'இதி' என்னும் காரணத்தால் பரமசிவன் 'சங்கர:' என்று பெயரிட்டு அழைக்கப்படுகிறார் என்பது இதன் கருத்தாகின்றது.

சுகத்தைக் கொடுக்கும் தன்மை வேறு சிலரிடம் இருந்தபோதிலும் சிவபெருமானிடமே இந்தப் பெயர் காரண இடுகுறிப் பெயராக வழங்கி வருகிறது.

**பெயரின் பொருத்தம்**

பரமசிவன் இவ்விதம் எல்லோருக்கும் சுகத்தையே கொடுக்கிறார் என்பதை நாம் ஸ்ரீருத்ரம் போன்ற வேதபாகங்கள் மூலமும், அதர்வசிகை போன்ற உபநிஷதங்கள் மூலமும், சிவபாரம்யத்தைக் கூறும் சைவ புராணங்கள் மூலமும், சிவ லீலைகளை விசேஷமாகக் கூறும் 'ஹாலாஸ்ய மாஹாத்ம்யம்' போன்றவை மூலமும், 'சிவ லீலார்ணவம்' போன்ற காவியங்கள் மூலமும் நன்கு உணரலாம்.

இந்த உலகின் தோற்றமே ஒரு சிவலீலை என்று, 'லோகவத்து லீலாகைவல்யம் – இந்த உலக சிருஷ்டி என்பது பகவானுக்கு ஒரு விளையாட்டேயாகும்' என்னும் ஸூத்திரத்தால் வியாசபகவான் குறிப்பிட்டுள்ளார். இது விஷயமாகச் சில மகான்களின் வாக்குகள் நினைவிற்கு வருகின்றன. அவற்றுள்—

ஸகலபுவனைக—மங்கள –
 சங்கர – குணவர்ணந—ப்ரவ்ருத்தேந ।
ந ஸ்மரணீயா: குதியோ
 லோகாயதிகா இவ வ்ரதஸ்தேந ॥

—நீலகண்டவிஜய சம்பூ, 15.

'சாஸ்திர முறைப்படி விரதங்களை அனுஷ்டிப்பதில் ஈடுபடுபவன் நாஸ்திக வாதம் செய்பவர்களை எப்படி நினைக்கக்கூடாதோ, அப்படி எல்லா உலகங்களுக்கும் மங்களத்தையே கொடுக்கும் சங்கரரின் பெருமைகளைச் சொல்லுபவன் அவரிடம் த்வேஷத்தால் குறைகாணும் மனிதர்களை நினைக்கவே கூடாது' என்பது ஒன்றாகும்.

இங்கு, 'ஸகலபுவனைகமங்கள' என்று, சங்கரரே எல்லா உலகத்திற்கும் சுகத்தைக் கொடுப்பவர் என்று குறிப்பிடப்பட்டிருப்பதைக் காண்க.

த்ருஷ்ட்வா கௌஸ்துபமப்ஸரோகணமபி
 ப்ரக்ராந்தவாதா மிதோ
கீர்வாணா: கதி வா ந ஸந்தி
 புவநே பாராதிவ: கேவலம்।
நிஷ்க்ராந்தே கரளே த்ருதே
 ஸுரகணே நிச்சேஷ்டிதே விஷ்டபே
மாபைஷ்டேதி கிராவிராஸ
 துரியோ தேவஸ் தமேவ ஸ்தும: ॥

'பாற்கடலிலிருந்து கௌஸ்துபம், அப்ஸரஸ் போன்ற நல்ல வஸ்துக்கள் வெளிப்பட்டவுடன் உனக்கு எனக்கென்று அடித்துக் கொண்ட தேவர்கள் பலர். அவர்கள் உலகத்திற்கு வெறும் பளுவானவர்களே. ஆலகால விஷம் அதிலிருந்து வெளிப்பட்டபொழுது அவர்கள் யாவரும் பங்கு கொள்ளாமல் ஓடிவிட்டனர். உலகம் அதிர்ச்சியுற்றது. அப்பொழுது, 'யாரும் பயப்பட வேண்டாம்' என்று அபயமளித்த தேவன் எவனோ அவனையே நாம் துதிக்கக்கடவோம்' என்பது மற்றொன்றாகும்.

இங்கே, கொடிய ஹாலாஹலம் என்னும் விஷத்தினின்றும் உலகைக் காத்துச் சுகமளித்தவர் பரமசிவன் ஒருவரே என்று குறிப்பிடப்பட்டிருப்பதைக் காண்க.

'சம்ஹார மூர்த்தியான பரமசிவன் உலகங்களுக்குச் சுகத்தைக் கொடுக்கிறார் என்பது எப்படிப் பொருந்தும்?' என்ற கேள்வி முதிர்ந்த அறியாமைக்கு அறிகுறியாகும்.

ஏனெனில், சம்ஹார மூர்த்தி என்பது பிரம்மா, விஷ்ணு, ருத்திரர் எனப்படும் மூவருள் ஒருவரான ருத்திரரேயன்றி அந்த மூவருக்கும் முதல்வனான பரமேச்வரன் அல்ல. மற்றும் உண்மையை ஆராயுமிடத்து, சம்ஹார மூர்த்தி, சிருஷ்டி மூர்த்தி, ஸ்திதி மூர்த்தி என்று மூர்த்திகளின்

வேறுபாட்டினுல் ஆன்மாவை வேறுபடுத்திக் கூறுவதும், அவற்றுள்ளும் மேன்மை தாழ்மை காண்பதும் அறியாமையாகும்,

'ஏகஸ் ததா ஸர்வபூதாந்தராத்மா ரூபம்ரூபம் ப்ரதிரூபோ பஹிச்ச.' (ஒன்ருகவும் ஸர்வ பூதங் களுக்கும் அந்தர்யாமியாயும் உள்ள ஆத்மவஸ்து தேகம் மனம் போன்ற உபாதிகளால் கூறுபட்டது போலத் தோன்றுகிறது.)

'ஏகோ தேவ: ஸர்வபூதேஷு கூட:.' (எல்லாப் பூதங்களுள்ளும் ஒரே ஆத்மாதான் உறைந்திருக் கிறது.)

'இந்த்ரோ மாயாபி: புருரூப ஈயதே.' (ஒரே தேவனே மாயாகார்யங்களால் பலவிதமான தோற்றங்களை அடைகிருன்.)

'அஜாயமானோ பஹுதா விஜாயதே.' (பிறவி யற்ற ஒரே ஆத்மாதான் பல பிறவிகளை எடுப்பது போல் காணப்படுகிறது.)

'புரச் சக்ரே த்விபத: புரச் சக்ரே சதுஷ்பத: புர: ஸ பக்ஷீ பூத்வா புர: புருஷ ஆவிசத்.'

(ஒரே ஆத்மாதான் இரு கால்கள் நான்கு கால்கள் கொண்ட எல்லாச் சரீரங்களையும் தோற்றுவித்து அதில் பிரவேசித்தது.)

'ஏகம் ஸத் விப்ரா பஹுதா வதந்தி' (ஒரே பொருளை அறிந்தவர்கள் உபாதிகளால் பலவாருகக் கூறுகிருர்கள்) என்பன போன்ற வேதவாக்கியங்களும், 'அசரீரம் சரீரேஷு அநவஸ்தேஷ்வவஸ்திதம்' (நிலையற்ற பலதிறப் பட்ட சரீரங்களுள் இருக்கும் ஆத்மா அவற்றுடன் உண்மையில் தொடர்பற்றது, அசரீரமானது) என்பது போன்ற வாக்கியங்களும்,

நமஸ் த்ரிமூர்த்தயே துப்யம்
ப்ராக் ஸ்ருஷ்டே: கேவலாத்மநே ।
குணத்ரயவிபாகாய
பச்சாத் பேதமுபேயுஷே ॥

படைப்புக்கு முன்பு ஒன்ருக இருந்து மூன்று குணங்கள் காரணமாகப் பின்பு பிரம்மா விஷ்ணு ருத்திரன் என்று மூன்று விதமான தோற்றங்களை அடைந்துள்ள உமக்கு நமஸ்காரம்.

திஸ்ருபிஸ் த்வமவஸ்தாபிர்
மஹிமாநமுதீரயந் ।
ப்ரலயஸ்திதிஸர்காணும்
ஏக: காரணதாம் கத: ॥

'ஒருவராக இருந்தும் முன்கூறிய தோற்றங் களால் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ப்ரளயம் என்பன வற்றிற்குக் காரணமாக உள்ளீர்' என்பன போன்ற மகாகவிகளின் வாக்கியங்களும், 'எங்கு முள்ள ஆத்மா ஒன்றேயன்றி வேறில்லை' என்றல்லவோ வலியுறுத்துகின்றன?

மேலும், மகாகவி காளிதாசர் கூறியிருக்கும் ஒரு விஷயமும் இங்கு நினைவிற்கு உரியதாகும். குமாரசம்பவம் ஏழாம் ஸர்க்கத்தில்,

ஏகைவ மூர்த்திர் பிபிதே த்ரிதா ஸா
ஸாமாந்யமேஷாம் ப்ரதமாவரத்வம் ।
விஷ்ணோர் ஹரஸ் தஸ்ய ஹரி: கதாசித்
வேதாஸ் தயோஸ் தாவபி தாது
ராத்யௌ ॥

'ஒரே வஸ்துதான் மூன்ருகப் பிரிந்துள்ளது. மேன்மை தாழ்மை என்பது இவர்களுள் கிடை யாது' என்று அவர் கூறுகிருர்.

இதிலிருந்து பிரம்மா விஷ்ணு மகேச்வரருள் மேன்மை தாழ்மை காண்பது எவ்வளவு அறியாமை என்பதை உணர வேண்டும்.

உண்மை இவ்வாறு இருக்க,

ரிகாத்யா பாரதம் சைவ
பாஞ்சராத்ரமதாகிலம் ।
மூலராமாயணம் சைவ
புராணம் சைததாத்மகம் ॥
யே சாநுயாயிநஸ் தேஷாம்
ஸர்வே தே ச ஸதாகமா: ।
துராகமாஸ் ததந்யே தே
யைர் ந ஜ்ஞேயோ ஜநார்தந: ॥

'விஷ்ணுவே பெரியவர் என்று கூறும் நூல்களே ப்ரமாணங்களாகும். மற்றவை

அப்ரமாணங்களே. அவற்றின் மூலம் விஷ்ணுவை அறிய முடியாது' என்று ஒருவர் கூறியிருப்பதும்,

**ஜீவா: ஸர்வே அஸ்வதந்த்ரா :,**
**ப்ரக்ருதிரபி ததா கிங்கரா: சங்கராத்யா**
**இத்தம் த்ரையந்தஸித்தம்**
**நிகமததிகதம் தாட்யதாம் ஜைத்ரபேரீ ।**

'ஜீவர்கள் எல்லாம் அடிமைகளே. பிரகிருதியும் அத்தகையதே. சிவன் முதலியவர்கள் ஏவலாளர்களே. இதுவே வேதங்களின் முடிவு, ஆகமங்களின் முடிவு என்று பறைசாற்றலாம்' என்று மற்றொருவர் கூறியிருப்பதும் எவ்வாறு பொருந்தும் என்பதை அறிவாளிகளே ஆராய்ந்தறிந்து கொள்ள வேண்டும்.

**சம்ஹாரம் என்பது என்ன?**

சம்ஹாரம் என்னும் பதத்தின் உண்மையான பொருள் என்ன என்பதை அறியாதவர்களின் கேள்வியே, 'சம்ஹார மூர்த்தியான பரமசிவன் உலகங்களுக்குச் சுகத்தைத் கொடுக்கிருர் என்பது எப்படிப் பொருந்தும்?' என்பது.

ஆன்மா ஸ்தூல உடலோடு வெளியே உள்ள விஷயங்களில் உழலும் நிலேயே 'விழிப்பு நிலே' (ஜாக்ரத்) எனப்படும். ஸ்தூல உடலே விட்டுப் பிரிந்து சூட்சும உடலுடன் நிற்கும் நிலே 'கனவு நிலே (ஸ்வப்னம்)' எனப்படும். சூட்சும சரீரத்தையும் விட்டுப் பிரிந்து காரண சரீரத்தோடு நிற்கும் நிலே 'ஆழ்ந்த உறக்கம் (ஸுஷுப்தி)' எனப்படும். இதுவே உண்மையான ஆனந்த நிலே என்பதை யாவரும் உணர்வர். எல்லா ஆன்மாக்களும் ஒரே சமயத்தில் அந்த நிலேயை அடைந்திருப்பதுதான் 'ப்ரளயம்' என்றும், 'ஸம்ஹாரம்' என்றும் சாஸ்திரங்களில் கூறப்படுகிறது.

அந்த நிலேயைப் பெறுவதற்கு எல்லா ஆன்மாக்களுக்கும் ஒரே சமயத்தில் அருள் செய்பவர் பரமசிவனேயாதலின் அவர் சம்ஹார மூர்த்தி எனப்படுகிருர். அந்த நிலேயில் எல்லா ஆன்மாக்களும் சுகத்தை அனுபவிக்குமா, துக்கத்தை அனுபவிக்குமா என்பதை ஸுஷுப்தியைக் கொண்டே நாம் எளிதில் அறியலாம். இதிலிருந்து, அவர்தாம் லோகங்களுக்கு உண்மையான சுகத்தைக் கொடுக்கிருர் என்பதே மிகமிகப் பொருத்தமாக இருக்கும்.

அவர் உலகங்களுக்குச் சுகத்தைக் கொடுக்கிருர் என்பது எப்படிப் பொருந்தும் என்று கேட்பது எவ்வளவு அறியாமையைக் காட்டுகிறது என்பதை உணர வேண்டும்.

அடுத்த இதழில் ஆதி சங்கரரைக் குறித்து விரிவாகப் பார்க்கப் போகிருேம். △

---

## ஆசன பலன்

பூசை, ஜபம் முதலியவற்றைச் செய்யும்பொழுது ஆசனங்களின் மீது அமர்ந்தே செய்தல் வேண்டும். தர்ப்பைப் புல்லால் ஆன ஆசனம் கீர்த்தியையும், மரப்பலகை ஆசனம் பெரும் சம்பத்தையும், வஸ்திர ஆசனம் வியாதி நீக்கத்தையும், கம்பளத்தால் ஆன ஆசனம் சௌக்கியத்தையும், புலித்தோல், மான்தோல் இவற்றினுல் ஆன ஆசனம் ஸம்பத்தையும், மோட்சத்தையும் அளிக்கும். சில ஆசனங்கள் தீய பலனேத் தரும். நிலத்தின் மீது இருந்து செய்பவர்கள் துக்கத்தையும், கல்லின்மீது இருந்து செய்பவர்கள் ரோகத்தையும், இலேயின் மீது அமர்ந்து செய்பவர்கள் மனச் சஞ்சலத்தையும், மூங்கிற்பாயில் இருந்து செய்பவர்கள் கஷ்ட தரித்திரத்தையும் அடைவர்.



# அருள்நெறிக் கதை

## பக்தை சபரி

'நாடோடி'

ஒரு வேட அரசனுக்கு மகளாகப் பிறந்தவள் சபரி. சபரிக்கு விவாக வயது வந்ததும், அவளை ஒரு வேடகுமாரனுக்குத் திருமணம் செய்து கொடுப்பதாக நிச்சயமாயிற்று.

திருமணமென்றால் வேடர்கள் நூற்றுக்கணக்கான ஆடுகளையும் மாடுகளையும் கொன்று, அவற்றின் மாமிசத்தை ருசித்துச் சாப்பிடுவார்கள். ஆகவே சபரியின் விவாக தினத்திற்கு முன்பு நூற்றுக் கணக்கான ஆடுமாடுகள் ஒரு பட்டியில் கட்டப்பட்டன.

இதைப் பார்த்த சபரி, அங்கிருந்த ஒரு வேடனைப் பார்த்து, ''எதற்காக இத்தனை ஆடுகளையும் மாடுகளையும் இங்கே கட்டி வைத்திருக்கிறார்கள்?'' என்று கேட்டாள்.

அதற்கு அந்த வேடன், ''நாளைக்கு உன் திருமணத்தையொட்டி ஒரு பெரிய விருந்து நடக்குமே; அதற்குச் சமைத்துச் சாப்பிடுவதற்காகத்தான் இவை கட்டப்பட்டுள்ளன!'' என்று சொன்னான்.

இந்தப் பதிலைக் கேட்டுச் சிறுமி சபரி மனம் புழுங்கினாள். 'நம் ஒருத்தியின் கல்யாணத்திற்காக இத்தனை ஜீவன்கள் கொல்லப்படுவதா? இதை எப்படியாவது தடுக்க வேண்டும்' என்று தீர்மானித்தாள். தான் எங்காவது ஓடிப்போனால் தன் கல்யாணம் தடைப்படும்; இந்த ஜீவன்களும் உயிர்பிழைக்கும் என்று தீர்மானித்தாள். அன்றிரவே ஒருவருக்கும் தெரியாமல் அவள் வீட்டை விட்டு வெளியேறி, வெகு தொலைவிலிருந்த தண்டகாரண்யத்தை அடைந்தாள்.

சபரிக்குச் சிறுவயதிலிருந்தே கடவுளிடம் மிக்க பக்தி உண்டு. ஆகவே கடவுளை நோக்கித் தவம் செய்யும் முனிவர்களுக்குத் தொண்டு புரிவதுதான் தன் வாழ்க்கையின் லட்சியம் என்று தீர்மானித்தாள். ரிஷிகள் நதிக்குச் செல்லும் பாதையைப் பெருக்கிச் சுத்தமாக்குவது, விறகு வெட்டி அவர்களுடைய ஆசிரமங்களில் கொண்டு சேர்ப்பது என்று இப்படிப் பல தொண்டுகளை நூற்றுக்கணக்கான வருடங்கள் செய்து வந்தாள்.

கடைசியில் அவள் மதங்க முனிவரின் ஆசிரமத்தை அடைந்தாள். மதங்க முனிவர் அவளுடைய தெய்வபக்தியைப் பெரிதும் பாராட்டினார். அவர் பூலோகத்தை விட்டுப் பிரியும் நாள் வந்தபோது, அவளைப் பார்த்து, ''இன்னும் சிறிது நாள் நீ இங்கேயே இரு. பகவான் ராமசந்திர மூர்த்தியாக அவதாரம் செய்திருக்கிறார். அவர் இங்கே வந்து உனக்குத் தரிசனம் கொடுப்பார்'' என்று சொல்லி உடலை விட்டார்.

ஸ்ரீராமசந்திரன் சீதையுடனும் லக்ஷ்மணனுடனும் ஆரண்யவாசத்தை ஆரம்பித்துவிட்டார் என்ற தகவல் தண்டகாரண்யம் முழுவதும் பரவிற்று. சபரியின் காதுக்கும் அது எட்டியது.

உடனே சபரி, 'இன்று பகவான் நம் ஆசிரமத்திற்கு வந்தாலும் வருவார்' என்று நினைத்து, ஆசிரமத்தைப் பெருக்கிச் சுத்தமாக்கினாள். சாணம் தெளித்துக் கோலமிட்டாள். ஆசிரமத்திற்கு வரும் வழியைச் சுத்தமாக்கினாள். குடிக்கத் தண்ணீர் கொண்டுவந்து பானையில் ஊற்றினாள். பிறகு பழங்களைச் சேகரித்து, அவை இனிப்பாக இருக்கின்றனவா என்று கடித்துப் பார்த்து, அவற்றை ஒரு புறமாகத் தனியாக எடுத்து வைத்தாள். பிறகு மாலை வரையில் பகவானை எதிர்பார்த்த வண்ணம் ஜபமாலையை உருட்டிக்கொண்டேயிருந்தாள்.

ஆனல் மாலைவரை அவர் வராதபொழுது, 'சரி, பகவான் இன்று யாரோ ஒரு ரிஷியின் ஆசிரமத்திற்குப் போய்விட்டார் போலிருக்கிறது. நாளை வருவார்' என்று நினைத்துக்கொண்டாள்.

சபரி இந்த நிலையில் இருக்க, அங்கிருந்த ஒவ்வொரு முனிவரும் பகவான் முதலில் தம் ஆசிரமத்திற்குத்தான் வருவார் என்று நினைத்துக் கொண்டிருந்தனர். 'இங்குள்ள தபஸ்விகளில் மிகச் சிறந்த தபஸ்வி யார் என்று பகவான் கேட்பார். உடனே நம் பெயரைத்தான் சொல்வார்கள். உடனே பகவான் நம் ஆசிரமத்திற்குத்தான் வருவார்' என்று எல்லோரும் நினைத்துக் கொண்டிருந்தார்கள்.

ஆனல் பகவான் ஸ்ரீராமபிரானே ஒரு முனிவரின் ஆசிரமத்திற்குள்ளும் நுழையாமல் நேராகச் சபரி இருந்த ஆசிரமத்திற்கே வந்தார். சபரி கொண்ட ஆனந்தம் சொல்லி முடியாது. அவள் கண்ணீரை ஆருய்ப் பெருக்கினுள்; பகவானை வாயாரத் துதித்தாள்.

சபரியின் ஆசிரமத்தில் பகவான் இருக்கிருர் என்று கேள்வியுற்று எல்லா முனிவர்களும் அங்கு வந்து சேர்ந்தார்கள். அவர்களைக் கண்டதும் சபரி அவர்களுக்குச் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்தாள். முனிவர்கள் ராமசந்திரனைப் பார்த்து, ''எங்கள் எல்லோருடைய ஆசிரமத்தையும் விடுத்துத் தாங்கள் எப்படிச் சபரியின் ஆசிரமத்தைத் தேர்ந்தெடுத்தீர்கள்?'' என்று கேட்டனர்.

பகவான் அவர்களை வணங்கிவிட்டுச் சொன்னுர்—''நீங்கள் எல்லோரும் தவசிரேஷ்டர்கள்; என் வணக்கத்திற்கு உரியவர்கள். ஆனல் நான் இங்கே உள்ளே நுழையும்பொழுது, 'யார் மிகச் சிறந்த தபஸ்வி?' என்று கேட்கவில்லை. 'யார் சிறந்த பக்தன்?' என்று கேட்டேன். எல்லோரும் சபரியைச் சொன்னுர்கள். ஆகவே தான் சபரி இருக்கும் இடத்திற்கு வந்தேன்.''

பகவானுக்கும் முனிவர்களுக்குமிடையே உரையாடல் நடந்தது. அப்பொழுது ஒரு முனிவர் பகவானைப் பார்த்து, ''இங்கு ஓர் அழகான தடாகம் இருந்தது. அதன் நீர் ஸ்படிகம் போன்று அத்தனை சுத்தமாக இருந்தது. குடிப்பதற்கு அந்த நீரைத்தான் நாங்கள் பயன்படுத்தி வந்தோம். இப்பொழுது தடாகத்தில் புழுக்கள் மலிந்துவிட்டன. நீர் அசுத்தமாகிவிட்டது; இது ஏன்?'' என்று கேட்டார்.



அதற்கு ராமர், ''ஒரு குளமோ கிணருே கெட்டுப்போவதோ காய்ந்துபோவதோ நாம் செய்யும் பாவத்தில்தான் ஏற்படுகிறது என்று பெரியோர் கூறுகிருர்கள். உங்களில் யாரோ பாவம் செய்திருக்க வேண்டும். அது காரணமாகத்தான் தடாகம் பாழாகிவிட்டது'' என்று சொன்னுர்.

முனிவர்கள் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்தார்கள். ''நாங்கள் யாரும் ஒரு பாவமும் செய்ததாக ஞாபகமில்லையே!'' என்றனர்.

அதற்கு ராமர், ''இதற்கு நான் பதில் சொல்கிறேன். ஒரு சமயம் விடியற்காலையில் ஒரு முனிவர் நதியில் ஸ்நானம் செய்துவிட்டுத் திரும்பி வந்துகொண்டிருந்தார். அப்பொழுது சபரி வழக்கம்போல முனிவர்கள் வரும் வழியைப் பெருக்கிச் சுத்தம் செய்துகொண்டிருந்தாள். முனிவர் வந்துகொண்டிருந்த வழி மிகவும் குறுகலான வழி. அத்துடன் அப்பொழுது இருட்டாக இருந்தது. அதனல் சபரியின் ஆடையின் ஒரு பாகம் தவறிப்போய் முனிவரின் காலில் சற்றுப் பட்டுவிட்டது. உடனே முனிவர் வெகுண்டு சபரியைக் கன்னு பின்னுவென்று திட்டினுர். பிறகு இந்தத் தடாகத்தில் வந்து ஸ்நானம் செய்தார். அவர் சபரியைத் திட்டிய காரணத்தால்தான் தடாகத்தில் புழுக்கள் மலிந்து கிடக்கின்றன'' என்று சொன்னுர்.

''இதைச் சுத்தப்படுத்த வழியே கிடையாதா?'' என்று முனிவர்கள் கேட்டார்கள்.

அதற்கு ராமர், ''ஒரு வழி இருக்கிறது. இந்தப் பக்தசிரோமணி சபரியின் கால் பட்ட தண்ணீரைத் தடாகத்தில் விட்டால் அது சுத்த மாகிவிடும்'' என்று சொன்னர்.

முனிவர்கள் அப்படியே செய்தனர். தடாகம் சுத்தமாகியது.

கடவுளை நம்பினேர் கைவிடப்படார் என்பது மட்டுமின்றி அவர்களைத் தேடிக்கொண்டு கடவுளே வருவார் என்பது சபரியின் வாழ்க்கை யிலிருந்து நிரூபணமாகிறது. △




1. ஆத்ம நிவேதனம்

எல்லாத் தெய்வங்களையும் குறித்த துதிப் பாடல்களும் நாமாவளிகளும் இந்த நூலில் தொகுத்துத் தரப்பட்டிருக்கின்றன. உபநிஷதம், கீதை ஆகியவற்றிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட பகுதிகள் தமிழ் மொழிபெயர்ப்புடன் இடம் பெற்றுள்ளன.

[வெளியிட்டோர்: ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் ஆச்ரமம், 26, துரைஸ்வாமி சாலை, தியாகராய நகர், சென்னை-600 017. பக்கம் 146. விலை ரூ. 3.]

2. ஸ்ரீராமகிருஷ்ண ஸஹஸ்ர நாமாவளி

ஸ்ரீராமகிருஷ்ண ஸஹஸ்ர நாமாவளி மூலம், ஸ்ரீராமகிருஷ்ண அஷ்டோத்தரசத நாமாவளி, ஸ்ரீராமகிருஷ்ண லகுபூஜா, ஸ்ரீராமகிருஷ்ண ஸ்தோத்திரம் ஆகியவை மூலத்துடனும் தமிழில் பொருளுரையுடனும் இந்த நூலில் தொகுத்துத் தரப்பட்டிருக்கின்றன.

[தமிழாக்கம்: 'அண்ணு', வெளியிட்டோர்: ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் ஆச்ரமம், சென்னை-600 017. பக்கம் 116. விலை ரூ. 3.]

3. சொரூபாத்வைதம் எனும் ஆத்மஞான அனுபவ நிருபம்

சுவாமி வாசுதேவானந்தர் அன்பர்களுக்கு எழுதிய கடிதங்களின் தொகுப்பு 'சொரூபாத் வைதம்' என்ற பெயரில் நூல் வடிவில் வெளி வந்துள்ளது. நூல் முழுவதிலும் வேதாந்த உண்மைகள் இடம் பெற்றுள்ளன.

[வெளியிட்டோர்: ஆனந்தாஸ்ரமம், நாங்கூர் அஞ்சல், சீர்காழி தாலுக்கா, தஞ்சை மாவட்டம், Pin-609 106. பக்கம் 104. விலை ரூ. 10.]

4. ஸ்ரீ கற்பகாம்பாள் அந்தாதி
(பக்கம் 16. விலை ரூ. 1)

5. ஸ்ரீ திருமகள் அந்தாதி
(பக்கம் 16. விலை ரூ. 1-25)

6. ஸ்ரீஜயசுப்பிரமணிய சுவாமி அந்தாதி
(பக்கம் 16. விலை ரூ. 1)

மேற்கண்ட மூன்று அந்தாதி நூல்களையும் இயற்றியவர்: சுத்தசத்வானந்தா. கிடைக்கும் இடம்: 14, சிங்காரி நாயக்கன் தெரு, மயிலாப்பூர், சென்னை-600 004.

7. கைவல்யோபநிஷத்

சம்ஸ்கிருதத்திலும் தமிழிலும் மூலமும், ஆசார்ய சங்கரானந்தரின் தீபிகையைத் தொடர்ந்த மொழிபெயர்ப்பும், குறிப்புகளும் கூடியது.

[ஆசிரியர்: வி. ஆர். கணேசன். கிடைக்கு மிடம்: வி. ஆர். கணேசன், 33/3, முதல் மெயின் ரோடு, காந்தி நகர், அடையாறு, சென்னை-600 020. பக்கம் 52. விலை ரூ. 5]

# ஸ்ரீராமபிரானின் அருளுரை

சுவாமி கமலாத்மானந்தர்

1. எல்லா ஆசைகளையும் எல்லாவிதப் பற்றுக்களையும் ஒழிப்பது எதுவோ அதுவே சுத்த ஞானமாகும். குறிப்பிட்ட ஒரு சுயநல நோக்கத்துடன் கூடிய எந்தச் செயலையும் விட்டொழிக்க வேண்டும். அத்தகைய கர்மம் பிறப்பு இறப்பு என்ற சக்கரத்தில்தான் உன்னைப் பிணைத்து வைக்கும். உண்மையான ஆத்மஞானத்தைப் பெறுவதற்கு அது உதவாது; மாருக, தடைதான் செய்யும். ஆகவே பற்றை விட்டுவிட வேண்டும்.

2. வேடன் வலையைப் பரப்புகிருன். அதுபோல, அகங்காரம் மக்களின் உள்ளத்தில் பலவித அழகிய மாயத் தோற்றங்களை உண்டு பண்ணுகிறது. அகங்காரத்திலிருந்து கடுமையான துன்பம்தான் விளைகிறது. மன அமைதி என்ற சந்திரனுக்கு அகங்காரம் ராகு போல இருக்கிறது. தாமரையை உறைபனி அழிப்பதைப் போல, மன அமைதியை அகங்காரம் அழிக்கிறது.

3. அகங்கார உணர்ச்சி இருக்கும் வரையிலும் மனிதன் கஷ்டப்பட்டே ஆக வேண்டும். அகங்காரம் மறைந்தால்தான் கஷ்டமும் மறையும். ஆகவே அகங்காரத்தைத் தவிர்த்து வாழ்வதுதான் மிகவும் சிறந்த நெறியாகும்.

4. மனைவி மக்களிடம் உள்ள பாசம் என்ற வலையை விரித்திருப்பது அகங்காரமே ஆகும். இந்த வலையிலிருந்து தப்புவதற்கு எந்த மாய வசியமும் உதவி செய்யாது. அகங்காரத்தைத் தவிர்த்தோமானுல் எல்லா மனவேதனைகளும் உடனே தாமாகவே அகன்றுவிடும்.

5. ஸ்ரீராமபிரான் கைகேயியிடம் கூறியது— அம்மா, இவ்விதம் நீங்கள் ஏன் என்னிடம் சொல்கிறீர்கள்? என் தந்தைக்காக என் உயிரையும் கூடத் தந்துவிட நான் தயாராக இருக்கிறேன். அவருக்கு உதவும்பொருட்டு நான் கொடிய விஷத்தையும் குடிக்க உட்படுவேன். அவர் பொருட்டு நான் அரசையும் துறப்பேன். சீதையையும், அன்னை கௌசல்யையையும் துறப்பேன்.

6. சுயதர்மத்தை அனுஷ்டிப்பது ஒரு சாதனை மட்டுமே ஆகும். ஆத்மஞானம் என்ற லட்சியத்தை அடைவதற்கு அது ஒரு வழியாக மட்டும்தான் இருக்கிறது. சுயதர்மத்தை அனுஷ்டிப்பதே ஓர் லட்சியம் ஆகிவிடாது.

7. உன்னுடைய இதய கமலத்தில் எப்போதும் ஆத்மாவைத் தியானம் செய்துகொண்டிரு. ஆத்மா என்பது புத்தி அல்ல, புலன்கள் அல்ல, இவை போன்ற வேறு எதுவுமே அல்ல என்பதை உணர்ந்திரு. இவற்றிலிருந்து முற்றிலும் வேறுபட்டிருக்கும் சத்வஸ்து அது. ஆத்மாவைத் தியானம் செய்வது காரணமாக உனக்குத் துன்ப அனுபவம் ஏற்படாது. உன் பங்காக அமைந்திருக்கும் பிராரப்தங்கள் எல்லாவற்றையும், அவை இன்பமாக இருந்தாலும் துன்பமாக இருந்தாலும் பொறுத்துக்கொள்.

8. ஆற்றுவெள்ளத்தில் அடித்துச் செல்லப்படும் பொருள் போல இருந்து, உன் கடமையைச் செய்து வா. அப்படிச் செய்வதனுல், செய்யும் கர்மத்தில் உனக்குப் பற்று ஏற்படாமல் இருக்கும். புறத்தளத்தில் எந்த வேலையைச் செய்துகொண்டிருந்தாலும் உன் மனம் மாசற்று இருக்கட்டும்; உன் குணம் பரிசுத்தமாக இருக்கட்டும்.

9. முற்பிறவிகளில் செய்த புண்ணியம் காரணமாக, உலக மக்களுக்கு முனிவர்களின் தொடர்பும் மகரிஷிகளின் தொடர்பும் கிட்டுகின்றன.

10. மனிதன் கர்வத்தைக் கைவிடுவதில்லை. நம்முடைய மனதைக் கொண்டு நாம் எப்போதும் துன்பத்தையும் அச்சத்தையும் உண்டுபண்ணியபடியே இருக்கிரேம். ஆனுல் இவையெல்லாம் கனவு போன்றவையே ஆகும். மந்திரவாதியின் மாயாஜால வித்தைகளெல்லாம் அப்பட்டமான பொய் என்பது எல்லோரும் அறிந்த விஷயம்.

11. ஈசுவரனுகிய நான் எல்லோரையும் சம திருஷ்டியுடனேயே பார்க்கிறேன். குறிப்பிட்ட எந்த ஒரு மனிதனும் அதிகமான அளவில் என் விருப்பத்திற்கு உரியவன் அல்ல. அதுபோலவே குறிப்பிட்ட எந்த ஒரு மனிதனும் என் வெறுப்பிற்கு உரியவனும் அல்ல. நான் கற்பக மரம் போன்றவன். என்னிடமிருந்து எது வேண்டப்படுகிறதோ அதை நான் தந்தருளுகிறேன்.

# கைவல்ய நவநீத - விளக்கம்

சுவாமி அமானந்தர்

ஆன பாவிகள் அடைவன நரகங்கள்
அவசியம் ஆனுலும்
தான மந்திர விரத ஓமங்களால்
தவிரும் என்பது பொய்யோ
ஈனம் ஆம் பல சன்ம சஞ்சித வினை
எத்தனை ஆனுலும்
ஞானம் ஆம் கனல் சுடும் என்ற
மறைமொழி
நம்பினுல் வீடு உண்டே. (பாடல் 51)

(நிரந்தரம் நெறியின்)

[மறை - வேதம்]

அனுபவிக்கும் பிராரப்த பாவ கர்மங்கள், புண்ணிய கர்மங்கள் எனப்படும் தான தருமங்களினுலும் யாகயக்ஞங்களினுலும் தவிர்க்கப் படுகின்றன. சஞ்சித வினை, ஞானத் தீயால் சுடப்படுகிறது என்பது நம்பிக்கைக்கு உரிய வேதமொழியாகும்.

உலகில் கர்மங்கள் பாவம், புண்ணியம் என்று இருவகையாகப் பிரிக்கப்படுகின்றன.

கோபம், பொருமை, காமம், லோபம், பிறர் பொருளின் மேல் ஆசைப்படுதல் ஆகிய இவை போன்றவை பாவ கர்மங்கள் ஆகின்றன. இத்தகைய கர்மங்களில் ஈடுபட்டு ஜீவன் ஒருவன் மனச்சஞ்சலம் அடைந்து அதைத் தீர்த்துக் கொள்ளக் கர்ம காண்டத்தில் சொல்லப்பட்ட தானம், மந்திரம், யக்ஞம், தீர்த்தயாத்திரை, ஆலயம் அமைத்தல் போன்ற புண்ணிய கர்மங்களில் ஈடுபடுகிருன். இவையே உலகில் பெரும்பாலோர் செய்பவை. இம் மாதிரியான புண்ணிய கர்மங்கள் செய்து சித்தசுத்தியை உண்டாக்கிக் கொண்டு பாவங்களைத் தொலைக்கிருன்.

ஞானகாண்டத்தை அறிபவன் கேட்டல், சிந்தித்தல், தெளிதல் என்ற சாதனையின் மூலம் தன் அறிவு தெளிந்து, தான் செய்யும் கர்மங்களிலும், முன் செய்த கர்மங்களிலும் தனக்குச் சம்பந்தம் இல்லை என அறிந்து அவற்றுக்குக் கர்த்தா ஆகாமல் இருப்பதனுல் அவனுடைய சஞ்சித வினையை அவன் அடைந்த ஞானம் சுட்டுத் தள்ளுகிறது. மேலும், அறிவறிந்த அவன், பந்தத்தை உண்டுபண்ணுகிற ஆசை முதலான பாவ கர்மங்களில் ஈடுபடுவதில்லை.

ஆசையே பயங்கரமான பந்தத்தை உண்டாக்குகிறது. 'That what you desire you get, but it comes with terrible bondage' என்பது சுவாமி விவேகானந்தரின் வாக்கு.

கர்மம் பிரகிருதியின் கூறு. அதில், தானுகிய ஆத்மாவுக்குச் சம்பந்தமில்லை என்று ஞானி தெளிவடைகிருன். எனவே தான் செய்யும் புண்ணிய காரியங்களுடன் அந்த ஞானி தன்னை இணைத்துக்கொள்வதில்லை.

ஜீவாத்மா ஒருவன் தான் தெளிவடைவதற்கு முன்பு தானம், யாகம், தவம், தீர்த்தயாத்திரை முதலான கர்மங்களில் ஈடுபட்டுத் தன் பாவ கர்மங்களைத் தொலைப்பதனுல் அது பிராரப்தத்தை அனுபவிப்பதாகிறது.

மனம் தெளிந்தபின் எஞ்சியுள்ள பிராரப்தம் சரீரம் நோய் முதலானதை அனுபவிப்பதன் மூலம் தொலைந்துபோகிறது. எனவே பிராரப்தம் முழுவதையும் ஞானி அனுபவித்துவிடுகிருன்.

நெல் பூமியில் இட்டால் முளைக்கிறது. ஆனுல் அவித்த நெல் முளைப்பதில்லை. அது போன்று ஞானத் தீயால் சஞ்சிதவினை அவிக்கப்படுவதனுல் அது மீண்டும் தொடருவதில்லை.

சஞ்சிதம் என்பது சம் + சிதம் எனப் பிரிகிறது. அதாவது முற்றும் சிதறடைந்தது என்பது அதன் பொருள். பிற்பட்ட ஜன்மங்களிலிருந்து தொடர்ந்து வருவதனுல் பலவீனமடைந்து சிதறடைந்துவிடுகிறது. எனவே தெளிவு எற்பட்டவுடன் அந்தத் தெளிவு அந்த வினையைப் பஞ்சினை ஊழித்தீப் போல் பொசுக்கிவிடுகிறது.

உதாரணம் ஒன்றின் மூலம் இதை விளக்கிக் கொள்ளலாம். முந்தின ஜன்மங்களில் ஒருவன் மாமிசபக்ஷியாக இருந்திருக்கலாம். ஆனுல்,

அது தனக்கு அவசியமில்லை என்று இப்போது ஒதுக்கித் தள்ளிவிடுகிறான். ஆயினும் இந்த ஜன்மத்தில் அதன் வாசனையைத் தற்செயலாய் நுகரும்போது வேட்கை உண்டாகலாம். ஆனால் அது தேவையில்லை என்று தெளிவான மனம் இருப்பதால் அந்த வேட்கை அக்கணமே அகன்றுவிடுகிறது.

ஒப்பிடு :

ஆசை, அச்சம், சினம் நீங்கியவர்களாய், என்மயமாய், என்னை அடைக்கலம் புகுந்து, ஞானதபசால் புனிதர்களாய்ப் பலர் என் இயல்பை எய்துகின்றனர்.

— பகவத் கீதோபநிஷதம், 4 - 10.

ஞானம் அடையப்பெற்றவன் சுட்ட சட்டி போன்றவன். இந்தச் சரீரம் வீழ்ந்தபிறகு அவன் புதிய பிறவி எடுப்பதில்லை.

—ஸ்ரீராமகிருஷ்ணர் உபதேசம்.

* * *

ஈசர் காரியம் பிரளயத்து ஒழியவும்
எவர் பவம் ஒழிந்தார்கள்
தேசகால தேக ஆதிகள் இருக்கவும்
சீவ காரிய மோகம்
நாசம் ஆக்கிய விவேகத்தின் உயிரொடு
ஞான முத்தர்கள் ஆனார்
பாச மோகங்கள் பசுக்களின் செயல்அன்றி
பசு பதி செயல் அன்றே. (பாடல் 57)

மகாப் பிரளய காலத்தில் சிருஷ்டி ஒடுங்கி விடுகிறது. ஆனால் அப்பொழுது ஜீவர்களின் பாவ புண்ணியம் ஒழிவதில்லை. மீண்டும் சிருஷ்டி ஆரம்பத்தில் ஜீவர்கள் தம் தம் வினைகளுக்கு ஏற்பப் பிறவி எடுக்கின்றனர். ஜீவர் தாங்கள் உண்டாக்கிக்கொண்ட ஆசையை விவேகத்தினால் நாசமாக்கினால் அவர்கள் அந்த விவேகத்தினோடு, உயிருடன் இருக்கும்போதே ஞானிகளாகி முக்தி பெறுகின்றனர். எனவே பாசம், மோகம் முதலியன ஜீவனின் சிருஷ்டியே ஆகும்.

கல்பாந்த காலத்தில் மகாப் பிரளயம் ஏற்படுகிறது என்பது கோட்பாடு. அப்பொழுது சர்வேச்வரனுடைய சிருஷ்டி ஸ்திதி சம்ஹாரம் ஆகிய முத்தொழில்களும் அடங்கிவிடுகின்றன. நல்ல தூக்கம் அதற்கு நல்ல சான்று ஆகிறது.

தூக்கத்தில் எல்லாச் செயல்களும் அடங்கி விடுகின்றன. சிருஷ்டி காரணமாகப் பிரபஞ்சம் பிரளயத்தில் ஒடுங்குகிறது. அங்ஙனம் ஒடுங்கும் போது ஜீவர்கள் யாவரும் முக்தி பெற்று விடுவதில்லை. முக்தி பெறாத ஜீவர்கள் யாவரும் முட்டை, வேர்வை, விதை, கருப்பை ஆகிய நால்வகை யோனியில் அடங்கியிருந்து மீண்டும் தம் தம் வினைகளுக்கு ஏற்பப் பிறப்பெடுக்கின்றனர் என்பது கோட்பாடு.

எனவே, ஈசனின் படைப்பாகிய பிரபஞ்சம் அழியும்போதும் ஜீவன் தன் அகங்காரத்தை விட்டு முக்தியடைவதில்லை. தூக்கத்தில் இருப்பது போல, அகந்தை அடங்கிய நிலையில் இருந்து, விழித்தவுடன் தொடருவது போன்று மீண்டும் பிறப்பு எடுக்கிறான். பிரளயம் என்பது அயர்ந்த நித்திரை போன்றது. தூக்கத்தில் ஜீவனின் அகங்காரம் அடங்கியிருந்து விழித்தவுடன் தோற்றத்துக்கு வருகிறது.

தேசகால நிமித்தமாக உள்ள பிரபஞ்சத்தில் இருந்துகொண்டே ஜீவாத்மா தன் அகந்தையை நாசம் ஆக்கினால் அவன் உயிருடன் இருக்கும்போதே அதாவது ஈசுவர சிருஷ்டி இருக்கும்போதே முக்தன் ஆகி ஜீவன்முக்தன் எனப் பெயர் பெறுகிறான். எனவே வேற்றுமைகளை உண்டுபண்ணுகிற நன்மை தீமைகளான கர்மங்களாகிய அகங்காரம் முதலியவை பிரகிருதிக்கு அடிமைப்பட்டு அல்லற்படும் பசு என்று பெயர் பெற்ற ஜீவனுடையதேயன்றி, இந்தப் பசுவுக்குப் பதியான அதாவது ஜீவனுக்கு ஆதாரமான சர்வேச்வரனுடையது அன்று என்பது தெளிவு.

ஒப்பிடு :

பாலர்கள் போன்று புறத்தேயுள்ள இன்ப நுகர்ச்சிகளைத் தொடர்ந்து செல்கிற அறிவிலிகள் விரிந்து கிடக்கும் மரண வலையில் விழுந்து மடிகின்றனர். அழிவற்ற மெய்ப்பொருளை அறிந்து, நிலையற்ற இந்த வையக வாழ்வில் நிலையுண்டென்று எதையும் நாடாத தீரர்கள் அமரத்வம் அடைகின்றனர்.

-- கடோபநிஷதம், 4 - 2.

தர்மம், அதர்மம், பாவ புண்ணியம் ஆகியவை ஜீவாத்மனுக்கு உண்டு. ஆனால் இவையெல்லாம் பிரம்மத்தைச் சாரமாட்டா.

— ஸ்ரீராமகிருஷ்ணர் உபதேசம்

# தியான வேளையிலே....

எப்.ஜே.அலெக்சாண்டர்

அந்தரங்க இதயத்திற்குள்ளே நிலவும் நிச்சப்தத்திற்குள் என் ஆத்மா மூழ்கியபோது, தெய்விகம் வாய்ந்த அந்தக் குரல், தன்னைச் செவிமடுத்தும்படி பின்வருமாறு கூறியது:—

''பாவத்தைவிட ஆழத்திலே, தீமையைவிட ஆழத்திலே நன்மை என்பது புதைந்திருக்கிறது. இந்த உலகத்தின் அமைப்பு, அதன் சாராம்சம், அதன் அடிப்படை நன்மையே—எல்லையற்றதும் ஒப்பிட இயலாததுமான நன்மையே ஆகும். கடவுள் சாந்நித்தியம் கொண்டிருக்கும் இடத்தில் தீமையின் சாயல்கூட லவலேசமும் இருக்க முடியாது. தீமை என்பது வெறும் ஒரு தோற்றமே தவிர ஒருபோதும் அது உண்மையல்ல. ஆத்மா என்ற கடலின் ஆழத்திலே, அசைக்க முடியாத குன்றுகளாகிய ஞானமும் சத்தியமும் இருக்கின்றன. இந்தக் குன்றுகளில் எல்லாப் பிழைகளும், எல்லாத் தீமைகளும், அவித்யையாகிய இருளும் மோதி மடிய வேண்டியனவே ஆகும். மேற்பரப்பிலே கடுமையான ஆசாபாசங்கள் என்ற சூறைக் காற்றுகளின் பேரிரைச்சலும், காமம் குரோதம் போன்ற மனவெழுச்சிப் புயல்களும், தீயவைகளும், இருள் சூழ்ந்த வேளைகளும் இருக்கலாம் என்பது உண்மைதான்; ஆனால் சாட்சாத்காரமோ — ஒரு கண நேர சாட்சாத்காரமோ போதுமான அளவுக்குச் சர்வ சக்தியும் வாய்ந்ததாகத் திகழ்கிறது. எல்லாவிதத் தீமைகளையும் பாவங்களையும் அது ஒரு புறம் ஒதுக்கித் தள்ளிவிடுகிறது. இருளை எல்லாம் தன் பிரகாசத்தினால் இல்லாமற் செய்துவிடும் கதிரவனின் பேரொளி போன்றது அது. எனவே, அந்தகாரமாக இருள் சூழ்ந்திருக்கும் நிலையிலும் அந்த ஒளியை நினைவுபடுத்திக் கொள். நீ பாவத்தில் மூழ்கிப் பாவச்செயலைச் செய்ய நேரும்போதும்கூடப் பகவானின் நாமத்தைக் கூவியழை; அவரது திருநாமத்தை ஜபம் செய். அவனும், அந்தப் பிரபுவும், உன் கூக்குரலை, உன் பிரார்த்தனையைச் செவிசாய்த்து அருள்புரிவான். அவன் தன் தூதர்களை உனக்கு உதவிசெய்ய அனுப்பி வைப்பான்.

''ஆத்மசக்தியைவிட மேலான சக்தி வேறு எதுவுமில்லை. உள்ளாழத்திலே, ஒன்றேயான தெய்விகத்தன்மை நிரந்தரமாகப் பெருக்கெடுத்து ஓடிக் கொண்டேயிருக்கிறது. அந்த ஏகப் பொருளின் ஓர் அருள்நோக்கு, ஒரேஒரு பார்வை, பாவமும் அஞ்ஞானமும் இருப்பிடமாகக் கொண்ட பேத உணர்ச்சிகளை எல்லாம் மறைந்தொழியச் செய்துவிடும். சாராம்சத்தில் நீ பந்தமற்றவனே, சுதந்திரனே, முக்தனே, தூய்மையானவனே, தெய்விகத் தன்மை பொருந்தியவனே ஆவாய்.



''இந்த அகிலாண்ட உலகத்திலுள்ள எல்லாச் சக்திகளும், நீ கூப்பிட்ட குரலுக்கு ஏன் என்று கேட்பதற்கு உன் முன்னால் கைகட்டிக் காத்திருக்கின்றன.

''நீ பந்தமற்று முக்தனுகவே இருக்கும்போது முக்திக்காகப் போராடுவாயா என்ன! ஆன்மிக ஞானத்தைத் தேடிச் சம்பாதிப்பதுதான் உன் இலட்சியமாக இருக்க வேண்டும். பேரானந்தக் காட்சியாம் பெருங்கனலின் ஒரு பொறியே நீமையின் மிகமிகச் சூட்சுமமான நிழலேயும்கூடச் சுட்டுச் சாம்பலாக்கிவிடுகிறது. பேரானந்தக் காட்சி என்ற பேரொளியின் ஒரு கிரணமே நீமையின் மிகமிகச் சூட்சுமமான நிழல்கூட இல்லாதபடி அழித்து வேரறுத்துவிடுகிறது.

''நித்தியப் பொருளின் அபார வலிமையும் பேரொளியும் கொண்டவன் நீ என்பதை அறிந்து கொள்! நீ அந்த நித்தியப் பொருளின் ஓர் அம்சமாக விளங்குகிருய் என்பதைப் புரிந்து கொள்! உன் வாழ்வு இங்கோ அங்கோ இல்லே! எல்லே கடந்த ஒன்றில் உன் வாழ்க்கை நிலேயாக ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. பாவம் என்ற உணர்ச்சிகளே எல்லாம் ஆழ்ந்து ஆராய்ந்து பார்க்கும்போது, அது அஞ்ஞானத்தையே வேராகக் கொண்டிருக்கிறது. அந்த அவித்யை ஒரு கனவு மட்டுமே. பாவத்தின் இயல்பு பலவீனமாகும். நீ வலிமை படைத்தவனுக இரு!

''பரப்பிரம்மத்தின், நீ எதுவோ அதுவேயான அந்தப் பரப்பிரம்மத்தின், ஒரு க்ஷணநேர சாட்சாத்காரம், ஒரே ஒரு கடைக்கண் நோக்கு, ஒரே ஒரு பார்வை—நீ அதுவாகவே ஆகிவிடுவாய். ஒளிமயமான சர்வசக்தி வாய்ந்த அதுவாகவே நீ ஆகிவிடுவாய்!''

மறுபடியும் நான் அந்தக் குரலேக் கேட்டேன். பிரார்த்தனேயில் மூழ்கியது போன்ற அந்தக் குரலேக் கேட்டேன்:

''புலன்களேயும் எண்ணங்களேயும் கொண்டு எழுப்பிய கோயில்களேக் கட்டியவனே! எதை நீ எழுப்பினுயோ அதை அழித்துவிடு! பயம், ஆண் பெண் என்ற வேற்றுமை, ஊண், உறக்கம் என்னும் இவற்றிலும், இவற்றிலிருந்து எழும் எண்ணங்களிலும் நீயாகவே அடைபட்டு, இருள் சூழ்ந்த அஞ்ஞானத்தில் உன்னே மூடிக்கொண்டு விட்டதைப் போலக் காணப்படுகிருய். முடிவற்ற கனவு கண்டுகொண்டே போகிருய். உன் அஞ்ஞானம்தான் உனக்கு ஒரு சாபமாக இருக்கிறது. கனவுகளேயெல்லாம் உடைத்தெறிந்துவிடு. சுகம் துக்கம் முதலிய துவந்துவ பாவங்களேயெல்லாம் அழித்துவிடு. அப்போது தேகாத்மபுத்தி என்ற இரும்புக் கவசம் தானுக உடைந்து அழிந்து போய்விடும். ஆகவே உன் முன்னுல் இருக்கும் பணி மிகவும் மகத்தானது, சிரம சாத்தியமானது. மாயையின் வலே சிலந்தியின் வலேயைப் போல மிகவும் நுண்ணியது; ஆனுல் அதே சமயம் அது கல்லேப் போன்று கடினமானது.

''ஓ ஆத்மாவே! உனக்கு நீயே உதவி செய்து கொள். உன்னே நீயே கடைத்தேற்றிக்கொள். இந்தக் கோயிலே நீயே கட்டியிருக்கிருய்; இந்தக் கோயிலே நீயே அழித்தாக வேண்டும்! அவ்விதம் அழிப்பதில்தான் உன்னுடைய ஆத்ம சாட்சாத்காரமும் ஏகத்துவத்தின் தெய்விக உணர்வும் அடங்கியிருக்கின்றன. சூரியனும் நட்சத்திரங்களும் பரந்த வெளியும்கூட உன் உண்மைச் சொரூபத்தை விழுங்கும்படி விட்டுவிடுவதா? சுத்தான்மா எப்போதும் உன்னுடன் ஒன்றியே இருக்கிறது! பிரிக்க முடியாதபடி ஒன்றேயாய் உள்ளது! ஓ ஆத்மா! அந்தகாரத்திலிருந்து வெளியே வா! அஞ்ஞானத்திலிருந்து வெளியே வா! இதெல்லாம் தானே தன்மீது சுமத்திக் கொண்டது. இன்பத்தைவிடத் துன்பமே மேலானது. சுகத்தைவிடத் துக்கமே வரவேற்கத்தக்கது. ஏனென்ருல், இவை கடவுளின் திருவருளேப் பெறுவதற்கு ஏற்ற வழி எதுவோ அந்த வழியில் மனதைச் செலுத்துகின்றன.

''ஓ ஆத்மா! பயங்கரப் பொருளிடமும் நீ அன்பு கொள்வாயாக! அந்தப் பயங்கரக் காட்சியில் நீ மரணத்தையே நேருக்கு நேரே காண்பாயானுலும்—இதோ, உண்மையாகவே நீ அழிவற்ற தன்மையையும் பேரருளேயும் காண்பாய். எவ்வளவுதான் உயர்வாகச் சொல்லப்பட்டாலும் வாழ்க்கை என்பது ஒரு கனவே ஆகும். இவை எல்லாவற்றுக்கும் அப்பால் மகத்துவம் பொருந்திய பரப்பிரம்மம் ஒன்றே ஒன்று மட்டும் இருக்கிறது. முடிவில், பரப்பிரம்மம் என்ற ஒற்றுமை தான் எங்கும் உள்ளது. தெய்விகமான, எல்லாவற்றையும் தன்னுள் அடக்குகிற ஒற்றுமை அது.

''எண்ணற்ற கிரணங்களேக் கொண்டிருந்தாலும் எல்லா இடங்களிலும் ஒரே சூரியன்தான்

பிரகாசிக்கிறது. சூரியனும் அதன் கிரணமும் ஒன்றே. சூரியனின் ஒளிக்கதிர்களும் சூரியனும் ஒன்றே. அவை இரண்டுமே ஒன்றுதான். நீதான் அந்தச் சூரியன். நீ அந்தச் சூரியனே தான். அஞ்ஞானம் என்ற காரிருள் சூழ்ந்த நிலையிலும் மனிதனிடம் ஆத்மாவின் ஒளி இருக்கிறது.''

இந்த அறிவுரைகளைக் கேட்டதும் என் மனம் ஆழ்ந்த, இன்னும் மேலும் மேலும் ஆழ்ந்த தியான நிலைகளுக்குச் சென்றது. அப்போது, உண்மையில் கிரணமும் சூரியன்தான் என்பதை அறிந்தேன்.

மறுபடியும், தியான வேளைகளில் தெய்விகச் சாந்நித்தியம் நிறைந்த குருவின் குரல் பின்வருமாறு எனக்குக் கேட்டது:—

''நிச்சப்தத்தில், சந்தடியெல்லாம் கடந்த ஆழ்ந்த அமைதியில், எல்லையற்ற சாந்தத்தில் உன் உண்மையான சொரூபம் குடிகொண்டிருக்கிறது! புலன்களின் அமளிதுமளி ஆர்ப்பாட்ட ஒலிக்கு வெகு தூரத்தில், வாழ்க்கையில் ஏற்படும் வேதனைக்கும் கவலைக்கும் வெகு தூரத்தில், பாவத்திற்கும் பரிதவிப்புக்கும் வெகு தூரத்தில்-ஏன், அவற்றுக்கெல்லாம் மத்தியிலும்கூட-அந்தச் சத்பொருளாகிய ஒரே தெய்வசக்தி குடிகொண்டிருக்கிறது. ஆகா! இந்தக் கனவு வலையின் பின்னல் எவ்வளவு அற்புதமாக இருக்கிறது! என்றாலுங்கூட, கனவைக் காட்டிலும் கனவு காண்பவன் மிகவும் அற்புதமானவனாகத் திகழ்கிறான்! அழிவற்றதாய், பிறப்பு இறப்புக்கு உட்படாததாய், சாவின் வரம்புக்கு அப்பாலாய், மாசற்றவனாய், அளவிட முடியாத தீமைகளின் முன்னிலையிலும்கூட—ஓ ஆத்மாவே, நீ தெய்விகத்தன்மையில் வேரூன்றியே இருக்கிறாய். நல்லது கெட்டது ஆகிய இரண்டும் எண்ணங்களின் ஓர் அளவுக்கு உட்பட்டிருக்கின்றன; நீயோ எண்ணத்திற்கு மிகவும் அப்பால் இருக்கிறாய், ஒப்புயர்வற்ற பர்த்துவத்தில் இருக்கிறாய், பேரொளியாகத் திகழ்கிறாய்! உன் சொரூபத்தின் அதியாச்சரிய சோபையோ எல்லாப் பொருளையும் கடந்து நிற்கிறது! ஒப்பிட முடியாதவன் நீ, வாக்குக்கு எட்டாதவன் நீ, அவாங்மன கோசரன்

## செய்திகள்

* வாணியம்பாடி, கோட்டைப் பிள்ளையார் கோவில் கல்யாண மண்டபத்தில் திருப்பணிக் கழகத்தின் ஆதரவில் பிப்ரவரி 21-ஆம் நாள் ஸ்ரீராமகிருஷ்ண ஜயந்தி கொண்டாடப்பட்டது. சுவாமி சர்வக்ஞானந்தர், சுவாமி கமலாத்மானந்தர் ஆகியோர் உரை நிகழ்த்தினர்.

* தமிழ்நாடு, ஸ்ரீராமகிருஷ்ண-விவேகானந்த பக்தர்கள் இரண்டாவது மாநாடு மே 7, 8, 9 தேதிகளில் மணல்மேட்டில் நடைபெறும். ஸ்ரீராமகிருஷ்ண மடங்களைச் சேர்ந்த துறவிகள் இம் மாநாட்டில் கலந்துகொள்வார்கள்.

மே 7-ஆம் தேதி வெள்ளிக்கிழமை ஒரு நாள் அந்தர்யோகமும், மே 8-ஆம் தேதி சனிக்கிழமை பக்தர்கள் மாநாடும், மே 9-ஆம் தேதி இளைஞர் மாநாடும் நடைபெற இருக்கின்றன.

மாநாட்டில் கலந்துகொள்ள விரும்பும் பக்தர்கள் பின்வரும் முகவரிக்கு முன்னதாகக் கடிதம் எழுதித் தொடர்பு கொள்ளக் கோருகிறோம்.

கே. இராமகிருஷ்ணன், செயலர்,
ஸ்ரீராமகிருஷ்ண தொண்டர் சங்கம்,
மணல்மேடு அஞ்சல், மாயவரம் தாலுக்கா,
தஞ்சை மாவட்டம், Pin : 609 202

மாயவரத்திலிருந்து 12 கிலோமீட்டர் தூரத்திலும், வைத்தீசுவரன் கோயிலிலிருந்து 10 கிலோ மீட்டர் தூரத்திலும் மணல்மேடு அமைந்துள்ளது.

* தியாகராய நகர், ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் ஆச்ரமம் 7-3-82-ஆம் நாள் ஸ்ரீராமகிருஷ்ண ஜயந்தி விழாவைக் கொண்டாடியது. மாணவர் பலர் பேச்சுப் போட்டியில் பங்கு கொண்டனர். சுவாமி கமலாத்மானந்தர் தலைமை வகித்துத் தலைமையுரை நிகழ்த்தினார். சுவாமி நடராஜானந்தர், பிரம்மசாரி முத்துக்குமார் ஆகியோர் ஆசியுரை வழங்கினர்.

நீ. தியானத்தின் உச்சியில், ஆத்ம சாட்சாத்காரத்தின் உயர்பூமியில் முடிசூட்டப்பட்ட ஒருவனே, அப்பிராகிருதமானவனே, தெய்வத் தன்மை பொருந்திய ஒருவனே! யார் உன்னைப் பாவி என்று சொல்லத் துணிவார்? அல்லது யார் உன்னை மகாத்மா என்று சொல்லத் துணிவார்? யாரால் உன்னைப்பற்றிப் பேச முடியும்! யாரால் உன்னைப்பற்றி நினைக்கத்தான் முடியும்!

''ஓ எல்லாவற்றிலும் திகழும் ஒன்றேயான பொருளே! எல்லாவற்றிலும் ஊடுருவியிருக்கும் அதே அழிவற்ற ஆத்ம சைதன்யமே! அழியும் தன்மையுள்ள வாழ்வின் அளவு கொண்டு யாரால் உன்னைக் குறிப்பிட முடியும்? மானிட வாக்கைக் கொண்டு யாரால் உன்னை எடுத்து விளக்க முடியும்? பிறப்பு இறப்பு அற்றவனாய், அழிவற்றவனாய், அப்பாலுக்கப்பாலாய் நீ இருக்கிறாய்.

''கொதித்துக் கொந்தளித்துக் குமுறும் காமம் குரோதம் போன்ற எல்லாவித எண்ணங்களுக்குள்ளேயும்கூட, எல்லாவற்றையும் மௌனமாய்ப் பார்த்துக்கொண்டிருக்கிற பரமபுருஷன் ஒருவன் இருக்கிறான் என்பதை அறிந்துகொள். அந்தப் பரமபுருஷனின் பேரொளியைப் புலனின் மாயக் கொள்ளிவாய்ப் பேய்களால் ஒருபோதும் மறைத்துவிட முடியாது. வாழ்க்கையின் சண்டை சச்சரவுகளெல்லாம் அந்தப் பரம புருஷனின் ஆழ்ந்த பேரமைதியைக் குலைத்துவிட முடியாது. அசைக்க முடியாதவன் அவன். நினைத்துப் பார்க்கவும் முடியாதவன் அவன். சூரியனுக்கு அப்பால், சந்திரனுக்கு அப்பால், நட்சத்திர மண்டலங்களுக்கும் அப்பால் அந்தப் பரமபுருஷன் இருக்கிறான். அவனே சுத்தான்மா; சுத்தான்மா அவன்தான்; புலன் துவங்கும் எல்லாப் போர்களிலும் போராட்டங்களிலும் அவனே வெற்றிவாகை சூடுபவன்.

''என்னதான் அஞ்ஞானம் மலையுச்சிகளின் அளவுக்கு உயர்ந்து பருத்துத் தோன்றினாலும், என்னதான் பாவக்கடல்களும் துயரக்கடல்களும் ஆழமாக இருப்பினும், உயரத்தையும் ஆழத்தையும் சுற்றிச் சூழ்ந்துகொள்பவன் அவன்; அவனே எல்லாமாய் இருப்பவன்; ஏகமாய் இருப்பவன்; நானாவித நாமரூப வேறுபாடுகளை எல்லாம் தன்னுள் விழுங்கிவிடுபவன்! இதை அறிந்துகொண்டு கட்டற்று இருப்பாயாக! சுதந்திரமானவனாகவே இருப்பாயாக!''

மறுபடியும் சில வார்த்தைகள் என் ஆத்மாவுக்குக் கேட்டன: —

''இதோ பார், நான் எப்பொழுதும் உன் அண்மையிலேயே இருக்கிறேன். உன் பாவ வலைப் பின்னலானது நெருக்கி இழுத்துச் சுருக்கப்படும்பொழுது, உன் பாவவினைகள் உன்னை அலைக்கழித்து அவதியுறச் செய்யும் போது, நீ அந்தகாரத்தில் அகப்பட்டுத் தட்டித் தடவித் தவிக்கும்பொழுது, நான் அங்கேயே உன்னுடன் உன் பாவச்சுமையை அனுபவித்துக் கொண்டிருக்கிறேன் என்பதை அறிந்துகொள்வாயாக! உன் அந்தரங்க உள்ளத்தின் இயல்புகளையெல்லாம் நன்றாக அறிந்துகொண்டு, உன் ஆத்மாவுக்கும் ஆத்மாவாக உன்னிடம் கோயில் கொண்டிருக்கும் சுத்தான்மாவை நான் உணர்கிறேன். நீ என்னிடமிருந்து எதையுமே ஒளித்து வைக்க முடியாது. சதா சர்வகாலமும் எப்போதும் சாந்நித்தியமாயுள்ள என்னிடமிருந்து உன் இரகசிய எண்ணத்தின் ஓர் அணுவைக்கூட எனக்குத் தெரியாமல் உன்னால் ஒளித்துவிட முடியாது. நான் உன்னுள் வாழ்கிறேன். நான் உன்னை மிகவும் நன்றாக அறிவேன். நான் இல்லாமல் உன்னால் அசையவும் முடியாது, மூச்சு விடவும் முடியாது. நீ எங்கே சென்றாலும் உன்னுடனேயே சென்றுகொண்டு, நீ எங்கே இருந்தாலும் உன்னுடனேயே இருந்து கொண்டு, நான் உன் சுத்தான்மாவாக இருக்கிறேன் என்பதை நன்றாக அறிந்துகொள். வா, உன் இதயத்தை என் இதயத்தோடு இணைத்துவிடு. என் இதயத்தை உன்னுடையதாகவே செய்து கொண்டுவிடு. அப்படிச் செய்தால் எல்லாம் நல்லதாகவே ஆகிவிடும். நிழலிலும் நிச்சப்தத்திலும் உன் இதயக் கோவிலிலும் நான் உறைகிறேன். சென்று வா! உலகில் சென்று, சுத்தான்மா எங்கும் பரந்திருப்பதைப் போல என் உபதேசங்களை எங்கும் பரப்புவாயாக. ஏனென்றால், ஆத்மாவைப் பற்றிய உபதேசம் உலகத்திற்கு உயிர் போன்றது. என் ஆசிகள் உனக்கு எப்போதும் உள்ளன. என் பரிபூரண அன்பு உனக்கு என்றென்றும் உண்டு. எனக்கு உன்மீது

இருக்கும் அன்பு ஒரு தாயின் அன்பு போன்றது; ஒரு புரு தன் குஞ்சினிடம் எத்தகைய அன்பு கொண்டிருக்குமோ அது போன்ற அன்பை நான் உன்னிடம் கொண்டிருக்கிறேன். உனக்குத் துன்பம் வரும்போது, ஆபத்து உன்னை அச்சுறுத்தும்போது, நான் உன் வேலைக்காரன், நான் உன் ஆத்மாவை நேசிப்பவன் என்பதை ஞாபகப்படுத்திக்கொள்!''

இந்த உரைகள் முடிந்தவுடன், என் பாவக் குவியல்களையெல்லாம் தமது அருள் வெள்ளத்திலே மூழ்க அடித்துவிட்ட என் குருவே, என் ஐயனே பேசினர் என்பதைத் தெரிந்துகொண்டு, நான் பின்வருமாறு புலம்பினேன்: —

''என் பிரபுவின் சந்நிதானத்தில் இருப்பதனால் என் இதயம் அளிக்கிற ஓ பரவசப் பேரானந்தமே! அவருடன் ஒன்றிவிடு, அவருடன் ஐக்கியமாகிவிடு! மிக மிகத் தெய்வத்தன்மை வாய்ந்த இத்தகைய எண்ணங்கள் என் உள்ளத்தில் பெருக்கெடுத்துப் பாய்வது எவ்வளவு இனிமையாக இருக்கிறது! மகான்கள் சொல்வது போல, தெய்விகம் என்ற கடலில் குதித்து மூழ்கிவிடு! ஓ முட்டாளே! தெய்வக் கடலில் பாய்ந்து அமிழ்ந்துவிடு!'' என்று எனக்கு நானே சொல்லிக்கொண்டேன். △

## அனுமன் கண்ட மலர்கள்



இராமதாசர் இராமாயணம் எழுதினர். எழுதியதைத் தமது சீடர்களுக்குப் படித்து விளக்கிக் கொண்டிருந்தார். அனுமாரும் நாள்தோறும் அதைக் கேட்க யாருக்கும் தெரியாமல் வந்து உட்காருவார்.

இராமதாசர், ''அனுமார் அசோகவனத்தை அடைந்தார். அங்கு வெள்ளை மலர்களைக் கண்டார்'' என்று எழுதியிருந்தார்.

இதைக் கேட்டதும் அங்கே அனுமார் உடனே தோன்றினர். ''நான் அசோகவனத்தில் வெள்ளை மலர்களைப் பார்க்கவில்லை. நான் பார்த்தவை சிவப்பு மலர்கள். நீங்கள் எழுதியிருப்பது பிழை. அதைத் திருத்துங்கள்'' என்று இராமதாசரிடம் சொன்னர்.

ஆனல் இராமதாசர், ''நான் எழுதியிருப்பது சரியே. நீங்கள் வெள்ளை மலர்களைத்தான் பார்த்தீர்கள்'' என்ருர்.

அனுமார், ''போனவன் நான்! அப்படியிருக்க நான் சொல்லுவது பொய்யா?'' என்று கேட்டார்.

கடைசியில் இந்த வழக்கு இராமரிடம் போயிற்று. அவர் தீர்ப்புச் சொன்னர்—''பூக்கள் வெள்ளையே! ஆனல் அனுமானது கண்கள் கோபத்தினல் சிவந்திருந்த காரணத்தால் அவை அவருக்குச் சிவப்பாய்த் தோன்றின'' என்று விளக்கமும் தந்தார்.

நாம் உலகை எந்த நோக்கத்தில் பார்க்கிருேமோ, அப்படியே அது நமக்குத் தோன்றும் என்பதே இதன் கருத்து.

—விேனுபா



# அருள் நெறிக் கதைகள்

நாடோடி

## குமாரிலபட்டரின் தியாகம்

சங்கராசாரியாரின் காலத்தில் இருந்த காசி அரசனுக்கு ஒரு பெண் இருந்தாள். அவள் வைதிக தர்மத்தில் மிக்க அக்கறை கொண்டவள். பௌத்த மதம் எங்கும் பரவிப் பழைய வைதிக மதத்தை அழித்துவிட்டதே என்று அவள் வருத்தப்பட்டாள்.

ஒரு நாள் அவள் அரண்மனையின் உப்பரிகையில் உட்கார்ந்து அழுதுகொண்டிருந்ததைக் குமாரிலபட்டர் என்ற பிரம்மசாரி பார்த்தார். ''எதற்காக அம்மா அழுகிறாய்?'' என்று கேட்டார்.

''நம் வைதிக மதம் க்ஷீணித்துக்கொண்டிருக்கிறதே; இதைக் காப்பாற்றுவார் யாரும் இல்லையே என்று கவலைப்பட்டு அழுகிறேன்'' என்றாள், அரசன் மகள்.



''அம்மா, நீங்கள் கவலைப்படாதீர்கள். நம் வைதிக மதத்தின் சிறப்பை எங்கும் பரப்ப என்னாலான முயற்சி செய்வேன் என்று நான் வாக்குறுதி கொடுக்கிறேன்'' என்றார் குமாரில பட்டர்.

ஆனால், பௌத்த மதத்தைக் கண்டனம் செய்து நம் வைதிகமதம்தான் சிறந்தது என்று அடித்துக் கூற வேண்டுமானால், முதலில் பௌத்த மதத்தின் கொள்கைகளை நன்கு தெரிந்துகொள்ள வேண்டும். ஆனால், அது காசியில் இருந்து கொண்டு ஆகாது; தக்ஷசீலம் சென்று அங்குள்ள புத்தபிக்ஷுக்களை அணுகினால்தான் அது நடக்கும் ஆகவே, குமாரிலபட்டர் காசியை விடுத்துத் தக்ஷசீலம் சென்று, ஒரு குருவினிடம் பௌத்த மதக் கொள்கைகளைப் படிக்க ஆரம்பித்தார்.

குமாரிலபட்டரின் குரு அவரிடம் வெகு அன்பாக இருந்தார். பௌத்த மதத்தின் நுணுக்கங்கள் எல்லாவற்றையும் அவருக்கு வெகு சிரத்தையுடன் சொல்லிக் கொடுத்தார்.

படிப்பு முடிந்ததும் குமாரிலபட்டருக்குத் தாம் அரசகுமாரிக்குக் கொடுத்த வாக்குறுதி நினைவுக்கு வந்தது. ஆகவே பௌத்த மதம் சிறந்ததா, வைதிக மதம் சிறந்ததா என்ற வாதத்தைத் தம் குருவுடனேயே வைத்துக்கொள்ளத் தீர்மானித்தார்.

'கடவுள் என்று ஒருவர் உண்டா, இல்லையா?' என்பதுதான் வாதத்துக்கு உரிய பொருள். 'கடவுள் என்று யாரும் கிடையாது' என்பது பௌத்தர்களின் கொள்கை. 'கடவுள் உண்டு' என்பது வைதிக தர்மத்தின் கொள்கை. மகத அரசரை மத்தியஸ்தராக நியமித்து, இரு தரப்பினரும் தங்கள் வாதங்களை ஆரம்பித்தனர்.

பல நாட்கள் வாதம் நடந்தது. ஆனால் மத்தியஸ்தரால் எந்தக் கட்சி ஜயித்தது என்ற முடிவுக்கு வர முடியவில்லை. குருவும் சரி, அவரை எதிர்த்து நின்ற சிஷ்யரும் சரி, அத்தனை திறமையாக வாதம் புரிந்தார்கள்.

கடைசியில் பௌத்தர்கள் ஒரு சூழ்ச்சி செய்தார்கள். இரண்டு பேரும் ஒருவர்பின் ஒருவராக ஒரு மலையுச்சியிலிருந்து குதிக்க வேண்டியது, யார் உயிர் பிழைக்கிறார்களோ அவர்கள் கட்சிதான் ஜயித்தது என்று கொள்ள வேண்டியது என்று தீர்மானித்தார்கள்.

தாம் முதலில் குதிப்பதாகச் சொல்லிக் குமாரில பட்டர் மலைமீது ஏறினார். ''வேதம்தான் பிரமாணம். பகவான்தான் எல்லாரையும் காப்பாற்றுகிறார். ஈச்வரர் சர்வக்ஞர், சர்வ சக்திமான்'' என்று சொல்லிக்கொண்டே கீழே குதித்தார்.

என்ன ஆச்சரியம்! அவருக்கு ஒன்றும் ஆகவில்லை. மலைமீதிருந்து குதித்த வலியும் அவருக்கு இல்லை. எல்லாரும் ஆச்சரியப்பட்டார்கள்.

அடுத்தபடியாகக் குரு குதிக்க வேண்டியது. ஆனால் அவர் பயந்துகொண்டு ஓடிப் போய் விட்டார். அதனால் வைதிக மதம்தான் சிறந்தது என்ற கோஷம் பாரதம் முழுவதும் எழுந்தது.

ஆனால் குமாரிலபட்டரோ, இதைக் குறித்துச் சந்தோஷப்படுவதற்குப் பதில், குருவை அவமானப்படுத்திவிட்டோமே என்று கவலைப் பட்டார். வைதிக தர்மத்தின்படி, குருவை அவமானப்படுத்துவது போன்ற கொடிய பாவம் கிடையாது. ஆகவே அதற்குப் பிராயச்சித்தம் செய்துகொண்டே ஆகவேண்டும் என்று தீர்மானித்தார்.

பிரயாகைக்குச் சென்று அங்கே பிராயச்சித்தம் செய்துகொள்ளத் தீர்மானித்தார். இந்த விஷயத்தை அறிந்து நாட்டின் மூலை முடுக்குகளில் இருந்த வித்வான்கள் எல்லாரும் பிரயாகையை அடைந்தார்கள். சங்கராசாரியாரும் சென்றிருந்தார். அப்பொழுது குமாரிலபட்டர் தீயைத் தம் மீது போட்டுக்கொண்டு தம் உடலைத் தகனம் செய்தார். அவர் உடல் அன்று மறைந்தது. ஆனால் அந்தக் குருபக்தசிரோமணியின் புகழ் இன்றும் நிலவுகிறது.

# ராமானுஜரின் உறுதி

திருக்கோட்டியூர் நம்பி என்ற பெரியவரைத் தம் ஆசிரியராகப் பெற வேண்டும் என்று ராமானுஜர் துடியாய்த் துடித்தார். எத்தனையோ தடவை திருக்கோட்டியூர் சென்றார். ஆனால் நம்பியைச் சந்தித்து அவரை ஆசிரியராகப் பெறும் பாக்கியம் ராமானுஜருக்குக் கிடைக்க வில்லை. ஆகவே அதைக் குறித்து எண்ணி எண்ணி அவர் மனம் உருகினார்.

திருக்கோட்டியூர் நம்பிக்கு நெருங்கிய தொடர்புள்ள ஒரு பாகவதர் இருந்தார். இந்தப் பாகவதர் ஒரு நாள் ராமானுஜரைக் கோவிலில் சந்தித்தார். அவரைப் பார்த்து ராமானுஜர், ''எனக்காகத் தாங்கள் நம்பிக்கு ஒரு செய்தி கொண்டு செல்ல வேண்டும்'' என்றார்.



''என்ன செய்தியோ?'' என்று கேட்டார் பாகவதர்.

''என்னிடம் அவர் இன்னும் கருணை காட்டாதது சரியன்று என்று சொல்லுங்கள்'' என்று சொல்லி மனத்துயர் தாளாமல் அழுதார்.

ராமானுஜருடைய நிலையைப் பாகவதர் திருக்கோட்டியூர் நம்பிக்கு எடுத்துரைத்தார். ஆனால் நம்பியோ, ''ஒரு மாதம் பட்டினி கிடந்த பிறகு என்னை வந்து பார்க்கச் சொல்லுங்கள்'' என்று தகவல் சொல்லியனுப்பினார்.

இதுகேட்ட ராமானுஜர் உடனே, தண்ணீர் கூடப் பருகாமல் பட்டினி கிடக்க ஆரம்பித்தார்.

பதினைந்து நாள் பட்டினி கிடந்தார். பதினறுவது நாள் மூர்ச்சையாய் விழுந்துவிட்டார்.

அதைக் கண்ட பாகவதர் பதைபதைத்துப் போனர். அவரைக் கவனித்துக்கொள்ளும்படி ராமானுஜரின் சிஷ்யர்களிடம் சொல்லிவிட்டு நம்பியிடம் விரைந்து சென்றார். ''ராமானுஜர் இறந்துவிடுவார் என்று தோன்றுகிறது. இப்படி அவரைப் பட்டினி கிடக்கச் சொல்லி விட்டீர்களே?'' என்று நம்பியைக் கேட்டார்.

ஆனல் நம்பி தம் மனதைக் கல்லாக்கிக் கொண்டவர் போலப் பாசாங்கு செய்தார். ''போனல் போகட்டுமே! போனல் பரமபத வாசியான ஆளவந்தாரிடம் ஆத்மரகசியத்தைக் கேட்டறிகிறார். இருந்தால் நான் உரைக்கிறேன்'' என்றார்.

''தண்ணீர்கூடக் குடிக்காமல் பட்டினி கிடக்கிறரே! அவர் இறந்துவிட்டால்?'' என்று கேட்டார் பாகவதர்.

''நான் தண்ணீர் குடிக்க வேண்டாம் என்று சொல்லவில்லையே! தண்ணீர் குடித்துக் கொள்ளட்டும்'' என்றார் நம்பி.

பாகவதர் திரும்பி வந்து ராமானுஜரைத் தண்ணீர் பருகச் சொன்னர். ராமானுஜரும் உயிர் பிழைத்து, ஒரு மாதப் பட்டினியை முடித்துக்கொண்டு திருக்கோட்டியூர் நம்பியிடம் உபதேசம் பெற்றார்.

குருவிடம் இப்படியும் பக்திபூண்ட சீடர்கள் நம் நாட்டில் இருந்திருக்கின்றனர்.

# எவன் ஏழை?



முன்ெரு சமயம் ஒரு ஞானி இருந்தார். அவர் ஒரு சிறிய கிராமத்திற்கு வெளியே குடிசை கட்டிக்கொண்டு வாழ்ந்து வந்தார். கிராமத்தார் கொடுக்கும் உணவை உட்கொண்டு எளிய வாழ்க்கை நடத்தி வந்தார்.

இந்த ஞானி தம்முடைய சாப்பாட்டுக்குக்கூட இந்த எளிய கிராமத்தை நம்பியிருப்பது ஒரு தனவானுக்குச் சகிக்கவில்லை. ஆகவே ஒரு நாள் அவர் ஒரு பைநிறையத் தங்க நாணயங்களை எடுத்துக்கொண்டு அந்த ஞானி இருந்த குடிசைக்கு வந்தார்.

ஞானியின் காலில் விழுந்து, ''தாங்கள் இந்தத் தங்க நாணயங்களை ஏற்றுக்கொள்ள வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டார்.

அதற்கு அந்த ஞானி, ''எனக்கு எதற்காகத் தங்க நாணயம்? யாராவது ஏழையைப் பார்த்துக் கொடு'' என்றார்.

தனவான் இதைக் கேட்டு ஆச்சரியப்பட்டார். 'இந்த ஞானியைப் போன்ற ஏழை கிடையாது. இருந்தும் யாராவது ஏழையாகப் பார்த்துக் கொடு என்று சொல்லுகிறரே' என்று நினைத்துக்கொண்டார்.

அவர் ஞானியைப் பார்த்து, ''யாரை ஏழை என்கிறீர்கள்?'' என்று கேட்டார்.

''எவன் நீ கொடுக்கும் பொற்காசுகளை விரும்பி வாங்கிக்கொள்கிறனே அவன்தான் ஏழை.''

அந்தச் சமயத்தில் மேளச் சப்தமும் பாண்டு ஒலியும் கேட்டன. இருவரும் நிமிர்ந்து பார்த்தார்கள். தூரத்தில் அந்த நாட்டு அரசன் பவனி வருவது தெரிந்தது.

ஞானி அரசனைக் குறிப்பிட்டு, ''அதோ வருகிறனே; அவன் ஓர் ஏழை. அவனுக்கு உன் பொற்காசுகளைக் கொடு, வாங்கிக் கொள்வான்'' என்றார்.

அரசனுடைய பவனி அருகில் வந்தது. தனவான் பொற்காசுகளை அரசனிடம் நீட்டினர். தனவான் தனக்குக் காணிக்கை கொடுப்பதாக நினைத்து அரசன் முகம் மலர்ந்து அதை வாங்கிக் கொண்டான்.

வெளிநாடுகளுக்கு ஆண்டுச் சந்தா விவரம்: இலங்கை (இந்திய நாணய மதிப்பில்)—ரூ. 14 யு.எஸ்.ஏ. $ 5 பிற நாடுகள் £ 2·5 ஆயுள் சந்தா: யு.எஸ்.ஏ.—$ 70 பிற நாடுகள் £ 35.

மலேசியா & சிங்கப்பூர் $ 8

தனிப் பிரதி உள்நாடு ரூ. 1-20